# ஸ்ரீ ஞானாட்சிதேவி அருட்பாமாலை





ஸ்ரீ கைலாச ஆசிரம வெளியீடு, பெங்களூர்.

# ஸ்ரீ ஞானாட்சிதேவி அருட்பாமாலை

(ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ திருச்சிசுவாமிகளின்
அருளாசியுடன் வெளியிடப்படுகிறது)

தொகுத்தவர்:
**லெ. சோமு**

வெளியிடுவோர் :
**ஸ்ரீ கைலாஸ் ஆஸ்ரமம்**
கெஞ்செனஹள்ளி,
பெங்களூர்—560039



SRI GNANAKSHI ARUTPAMALAI

First Edition April 1987
Second Edition April 1994

Author
Compiled by SOMU

*Printed by*
Sri Kailash Printers,
Madras - 600 002.
Ph : 832906.

*Typeset by*
*Systech*
3, Mount Road,
Madras - 600 002.
Phone : 84 17 04.

*Cover Design :*
Sri Kailash Printers

*Published by*
SRI KAILASH ASHRAM MAHASAMSTHAN TRUST,
Rajeswari Nagar,
Bangalore - 560 039.

PRICE : Rs. 10/- Ten Only.

# பொருளடக்கம்

# அணிந்துரை

என் இளைய நண்பர் சோமு அவர்கள் தொகுத்த இந்தப் பாமாலை நூலுக்குச் சிறிய அணிந்துரை எழுதும் படி அவர் என்னை விரும்பிக் கேட்டுக் கொண்டார். செய்யுட்களைப் படிப்பதற்கு முன்பே தான் நட்புக் கிணங்கிச் சரி என்று சொல்லி விட்டேன். படித்த பின்னர் மகிழ்ச்சியில் மூழ்கித் தேனுண்ட வண்டைப் போல் ஆனந்த மடைந்தேன். பின்புதான் கவிதையின் எளிய நடையும், பக்திரஸமும், எல்லோரும் அறியத் தகுந்த செந்தமிழ் வாக்கும், தாளத்திற்கேற்ற சந்தமும், ஒன்று கூடி. அமைந் துள்ள பாடல்களின் மேன்மையைப் பகுத்தறிய முடிந்தது.

இப் பாடல்களுள் சில சோமுவே இயற்றியவை; மற்றும் சில அன்னியர் செய்தவை. எல்லாமே எளிதில் பாடத் தகுந்தவை.

பெரும்பாலும் இச்சிறிய தொகுப்பில் உள்ள பாடல் கள், கைலாசாச்ரமத்தில் கோயில் கொண்டிருந்து அருள் ப்ாலிக்கும் திருஞானாக்ஷி ராஜராஜேச்வரி அம்மையின் பேரில் பாடியவை. ஒரு சில பாடல்கள் சிவன் பேரிலும், முருகன் பேரிலும் அமைந்துள்ளன. வெல்லப்பிள்ளை யானா எங்குக் கிள்ளிச்சுவைத்தாலும் இனிப்பே என்றபடி, யாவையும் சுவை வாய்ந்து பாடவும் கேட்கவும் இனிமை தரும் தன்மை படைத்தவை.

இந்து சமயத்துக்கு மற்றெல்லாச் சமயங்களைவிட ஒரு தனிச் சிறப்புண்டு. இச்சமயத்தில் மட்டுமே கடவுளைத் தாயாகப் பாவித்து வழிபடுகிறோம். தத்துவம் வேண்டாம். பாமர இயல்பைப் பார்ப்போம். தாயன்புக்கு ஈடும் எடுப்பும் இல்லை, எல்லையும் இல்லை. தகப்பன் அடித்தால் குழந்தை தன் தாயிடம் ஓடும. தாய் அடித்தால் அவள் காலையே இறுகக் கட்டிக் கொண்டு விடும். தாய்க்குப்பின் வேறு புகலிடம் எதுவும் கிடையாது. ஒரு குடும்பத்தில் பல மைந்தர்கள் இருந்தால், அவர்களுள் எவன் ஒருவன் எளியவனோ, அவனிடம்தான் அன்னை அன்பு செலுத்துவாள்.

தேவி திக்கற்றவர்களுக்குத் திக்காகி நிற்கிறாள் தாயன்புக்குப் பசு தன் கன்றிடம் காட்டும் அன்பைத்தான் உவமையாகக் கூறுவது வழக்கம். வடமொழியில் இக் கருத்தையொட்டி அன்னையின் அன்புக்குப் பொதுவாகவே ''வாத்ஸல்யம்'' என்று கூறுகிறார்கள்; அதாவது பசு தன் கன்றிடம் வைத்திருக்கும் பேரன்பு என்று அதற்குப் பொருள்.

தத்துவ வழியாகப்பார்த்தால், எல்லா சிருஷ்டியும் பெண் வழியாகத்தான் இயற்கையில் இருப்பதைக் காண்கிறோம். சிவன் தனிமையிலிருந்து செயல்புரியாத ஆனந்த மூர்த்தியென்றும், தேவியென்றும் சக்தியென்றும் வழங்குவது யாவும் சிவனின் செயல்திறம் என்றே, அறிதல் வேண்டும். சிவன் வேறு, சக்தி வேறென்றெண்ணுவது தவறு. சக்தியே சிவம். சும்மா இருந்தால் சிவன் அவரே தொழிலில் இறங்கினால் சக்தி. இவ்விரு வகைக் கொள்கைகளில் சக்தியும் சிவமும் ஒன்றே எனும் தத்துவத்தைக் காண்பதே அறிவு.

உவமையாகக் கூற வேண்டின் சிவனுக்கும் சக்திக்கும் உள்ள ஒற்றுமை நீர் தேக்கத்திற்கும் அதிலிருந்து பிரியும் வாய்க்கால்களுக்கும் உள்ள உறவு போலவும், சூரியனுக்கும்

அதிலிருந்து பெருகும் சூரியக் கிரணங்களுக்கும் உள்ள உறவு போலவும் உள்ளதென்று சிவசக்தி தத்துவம் பகரும்.

நிற்க, இக்கோவையில் கண்டிருக்கும் பாடல்கள் ஒவ்வொன்றும் சுவை வாய்ந்தவை. மேலும் சில பாடல்கள் மிக அழகாகவும் அமைந்து விட்டுள்ளன, "காற்றைப் படைத்தவன் நீயென்ற போதிலும் கவரிகள் வீசுகின்றோம்" என்ற செய்யுள் உயர்ந்த பொருள் கொண்டது. அன்னே அருவத்திலிருந்து உருவமும் ஆனவள். நமக்குள் ஆன்மா வாக இருப்பவள்; வெளியே உலகமாக இருப்பவள். அவள் அளித்ததைத்தான் திரும்ப அவளுக்கே அளிக்கிறோம். இது வெறும் பேதமையன்று. மாறாக, நமது பக்தியை வெளிப் படுத்தும் புனிதச் செயலாகும்.

எளிய நடை, பக்தி ரஸம் இவ்விரண்டும் ஒருங்கே கலந்திருக்கும் பாடலுள் கீழே காண்பதொன்று.

> "கங்கைச் சடை முடியோன்
> பங்கிலிடம் பெற்றவளே
> திங்கள் முகமுடைய
> தேவியென் ஞானாக்ஷி;
> சங்கர்க் கீடாக
> சதிராடும் நாயகியே,
> பங்கமின்று வாழ்வதற்கு
> வந்து அருள் தந்திடுவாய்!"

சிவன் தலையில் விழுந்து, பின்னரே கங்கை பூமியில் இறங்குகிறது. ஆகையால் அவனுக்குக் "கங்காதரன்" என்ற பேர் வந்தது. அவனுடலில் ஒரு பாதியில் தேவி தங்கியிருக்கிறாள். அவனை "மாதிருக்கும் பாதியினள்'. என்று பாடியிருக்கிறார்கள். இதிலுறைந்த பொருள் சிவனும் சக்தியும் ஒன்றேயென்பதுதான். ஆகவே அவனை "அர்த்த நாரீச்வரன்" என்று வழங்குகிறோம். மேலும்,

ப்ரளய காலத்தில், உலகெலாம் ஒடுங்கிச் சிவனிடம் சேருங் கால், சிவன் தாண்டவமாடினன், என்பது நமது கொள்கை. அச்சமயம், சிவனுக்குச் சரியாகத் தேவியும் ஆடினள் என்பதும் நமது கொள்கையே.

இவ்வாறு, மேலெழுந்த வாரியாக நோக்கினல் வெறும் பக்திப் பாடல்கள் என்றிருந்தாலும், அவற்றில் அருமை யான தத்துவங்கள் புதைந்து கிடக்கின்றன.

இதுபோலவேதான் மற்றவையும்.

இந்நூலில் அடங்கியிருக்கும் பாடல்கள் எல்லோரும் பாடிப்பயனடைவதற்கு அன்னையே அவர்களுக்கு அருள் பாலிக்க வேண்டும் என்று அவ்அன்னையையே வேண்டு கின்றேன்.

விமர்சானந்தா
(SY. Krishnaswamy)

ஓடி வரும் கூற்றம் கண்டு
நடுங்காது நின்றிட வே
மன வன்மை நல்கிடுவாய்
அன்னையே, ஸ்ரீ ஞானுக்ஷியே !

# முன்னுரை

''யதோ வாசோ, நிவர்த்தந்தே, அப்ராப்ய மனஸா ஸஹ ஆனந்தம் பிரம்மஞோ வித்வான், நபிபோதி கதாச னேதி' என வேத வேதாந்த உப நிஷத்துக்களுள் ஒன்றான தைத்திரீயோ பநிஷத்தில் மனம், வாக்கு காயமாகிய உணர் வுகளைக் கடந்த மஹா சக்தியைப் பற்றிப் பூரணமாகக் கூற இயலாதெனச் சொல்லப்பட்டிருக்கிறது. அத்தகைய மஹாசக்தி அஞ்ஞானிகளாக இருக்கின்ற நாம் ஞானம் பெற்று உய்யும் பொருட்டு அவ்வப்போது பெரும் சக்தி படைத்த ஞானிகளாகத் தோன்றி பலஅரும் பெரும் செயல் களை நிகழ்த்தி நம்மை அருள் வழிக்கு ஆளாக்கி ஆட் கொள்ளுகின்றாள். அப்படித் தோன்றிய பேரருளின் வடி வமே, சக்தியின் ஸ்வரூபமே, நமது ஜகத்குரு ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ திருச்சி மஹாஸ்வாமிகள் அவர்கள்.

ஸ்ரீ ஆதிபராசக்தியின்தேஜோமயமானசரீரத்திலிருந்து தோன்றியவை பாரத பூமியில் உள்ள 51 சக்தி பீடங்கள் ஆகும். அவற்றுள் ஸ்ரீ தேவியின் கர்ணபாகத்திலிருந்து தோன்றியசக்திபீடம் கர்நாடகமா நிலத்தின்தலைநகரமான பெங்களூருக்குத்தென் மேற்கில் கெஞ்சனஹள்ளி என்ற பெயர் பூண்ட ஸ்ரீ காஞ்சனாபுரியில் அமையப்பெற்றிருக் கிறது. ஸ்ரீ காஞ்சனபுரியென்ற திருத்தலம் பண்டைக்காலத் தில் அத்திரிமகரிஷி, அனுசூயை, மற்றும் தேவர்கள், முனி வர்களால் பூஜைசெய்யப்பட்டு நித்திய சான்னித்யம் பெற்று விளங்கும் தெய்வத்திருத்தலமாகும்.

இத் திருத்தலத்தில் காண்பவர் உள்ளம் களிப்புறும் வகையில், கவின்மிகு அழகில், ஸ்ரீகைலாஸ ஆஸ்ரமம் அமைந்துள்ளது. இந்த ஆஸ்ரமத்தைச் சங்குஸ்தாபனம் செய்வித்த அருட்பெருந் திரு ஸ்ரீலஸ்ரீ திருச்சி மஹா ஸ்வாமி கள் அவர்கள் ஆஸ்ரமத்தில் கொலுவீற்றிருந்து வருகின்ற பக்தர்கட்கு அருள் வழங்கிக் கொண்டிருக்கின்றார்கள்.

ஸ்ரீ கைலாஸ ஆஸ்ரம மஹா சமஸ்தானத்துக்குச் சொந்தமாக பெரும் பொருட் செலவில் ஷ்டி ஆஸ்ரம வளா கத்துக்குள் மிகுந்த வேலைப்பாடுடைய, கலையழகு நிறைந்த ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி ஆலயம் நிர்மாணிக்கப்பெற்றுள்ளது. ஸ்ரீ ஆதி பராசக்தி இங்கு ஸ்ரீ ஞானுஷியாகக் கொலுவீற் றிருக்கின்ருள். இந்த ஆலயம் கர்ப்பக்கிரஹ அர்த்த மண்ட பம், அஷ்டலட்சுமி மண்டபம், மூன்று நிலை ரிஷிகோபுரம், மூன்று பிராகாரங்களுடன் சிற்பசாஸ்த்திர லெக்ஷணப் பிர காரம் அமைக்கப்பெற்று 19—6—78 அன்று அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம் மிகச்சிறப்பாகச் செய்விக்கப்பெற் றது. தற்போதுஅற்புதவேலைப்பாடுடையஎண்கால் மண்ட பத்துடன் இணைந்த இரண்டாவது கோபுரம் பூர்த்தி அடை யும்நிலையில் திருப்பணி வேலைகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றது.

ஸ்ரீ ராஜராஜேஸ்வரி ஆலயத்துக்கு நாள்தோறும் பக்தர்கள் நிரம்ப வந்து ஸ்ரீ ஞானுஷியைத் தெரிசனம் செய்து ஆன்மஞானம், ரோகநிவர்த்தி, கன்னிகைகளுக்கு விவாஹம் வித்யார்த்திகளுக்கு வித்தை, புத்தி ஸ்வாதீன மற்றவர்கள் நன்னிலைபெறுதல் மற்றும் வேண்டுவார் வேண்டுவன பெற்று மகிழ்வதை நாம் கண்கூடாகக் காண் கின்றோம்.

வழிபாடுகளில் சக்திவழிபாடு சிறப்பு மிகுந்த வழிபாடு எனலாம். நாம் உலகில் காணும், நீர், நிலம், நெருப்பு யாவும் சக்தியின் தோற்றங்களேயாகும். சக்தியின்தத்துவம்

தாய்மையைக் குறிக்கும். ஸ்ரீ ராஜராஜேஸ்வரிஞானஷியாக இருந்து ஞானத்தையும், இலக்குமியாக இருந்து செல்வத்தையும் சரஸ்வதியாக இருந்து கல்வியையும் நமக்கு வழங்குகின்றாள் அன்னை சக்தியின் அருள் வளத்தைத் திருமூலர் பின்வரும் பாடலால் குறிப்பிடுகின்றார்.

வாயும் மனமும் கடந்த மனோன்மணி
பேயும் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை
ஆயும் அறிவும் கடந்த அரனுக்குத்
தாயும் மகளும் நல்தாரமும் ஆமே!

## தேவியின் மகிமை

இஃதன்றி தேவாரம் திருவாசகம் போன்ற திருமுறைகளும் தேவியின் மகிமையைத் தெளிவுபடக் கூறுகின்றன.

விதிமுறை வழுவாது ஸ்ரீ தேவியைப் பூஜை செய்தால் நாடும் மக்களும் நலம் பெறுவார்கள் என்ற திருக்கருத்தைக் கொண்டு இங்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ ஞானக்ஷிக்குப் பிரதி தினமும் கோ பூஜை, விஸ்வரூபதெரிசனம், உஷக் காலப் பூஜை, காலசந்தி, உச்சிக்கால பூஜை, சாயங்கால பூஜை, அர்த்தஜாம பூஜைகளும், மஹாபிஷேகமும் சோட சோபசார தூப தீபாராதனையும் வேத வாத்யங்கள் திருமுறைகள் முழங்க முறை பிறழாமல் நியதியாக நடை பெற்று வருவது குறிப்பிடத் தக்கதாகும்.

உலகத்தில் முதலில் தோன்றியது ஜலமே. ஆகவே ஆலயத்தின் சமீபத்தில் உள்ள ஸ்ரீ கைலாஸ ஆஸ்ரமத்தில் இருக்கின்ற அமிர்தசரஸ் என்னும் கிணற்றிலிருந்து ஸ்ரீ கங்கா தேவியைப் பூஜித்து வாத்யங்கள் முழங்க ஜலத்தைக் கவசத்தில் கொண்டு வந்து ஸ்ரீ தேவி பீடத்துக்கு அபிஷேகம் நாள்தோறும்செய்விக்கப்படுகின்றது. இவ்விதம் செய்வித்தால் தீர்த்தங்கள் புனிதம் பெறும் என்று சாஸ்த்திரம் கூறுகின்றது. இதற்குத் திருமஞ்சனம் என்று பெயர்.

உ

# தேவி வழிபாடு

உலக மக்கள் நலம் பெறும் பொருட்டு இந்த ஆலயத்தில் வருடம் தோறும் நவராத்திரி உற்சவத்தில் தமிழ்நாடு மற்றும் பல மாநிலங்களிலிருந்து வேதாகம பண்டிதர்களை வரவழைத்து ஸ்ரீ அம்பிகைக்கு சண்டிஹோமமும், மஹாபிபிஷேகமும் வெகு விமரிசையாக நடைபெற்று வருகின்றது நவராத்திரி யாகசாலையில் பூஜாகார்யங்கள் நடைபெறும் வேளையில் ஸ்ரீலஸ்ரீ மஹாஸ்வாமிகள் அவர்களையும் எழுந்தருளச் செய்வது வழக்கம், அவ்வமயம் ஸ்ரீ தேவியும் ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களையும்ஒருசேரக்கண்ணுறும்போது தேவி அங்குற்றாளோ இங்குற்றாளோ என வியக்கும்படியாக அமைந்திருக்கும். இந்த நிகழ்ச்சியானது குருவருளையும், திருவருளையும் நமக்கு கூட்டி வைக்கும் அரிய நிகழ்ச்சியாகும்.

ஸ்ரீ அம்பிகையை ஆகம விதிப்படி பூஜை செய்தால் கிடைத்தர்க்கரிய பெரும் பேறுகளைப் பெற்று உய்யலாம் என்பதர்க்கு பெங்களூர் கெஞ்சனஹள்ளி ஸ்ரீ கைலாஸ ஆஸ்ரமத்தைச் சேர்ந்த ஸ்ரீராஜ ராஜேஸ்வரி ஆலயம் மிகச் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குகின்றது.

ஸ்ரீராஜராஜேஸ்வரி ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் அருள்மிகு ஸ்ரீராஜராஜேஸ்வரி அம்பாளுக்கு ஸ்ரீலஸ்ரீ சற்குரு மஹாஸ்வாமிகள் அவர்களின் பூரண நல்லாசியுடன் பக்தர்கள் படித்து வழிபாடு செய்து பயன்பெறவேண்டுமென்று விரும்பி இந்தப் பாமாலைத் தொகுப்பு வெளியிடப் பெற்றுள்ளது.

இந்தப் பாமாலை தொகுப்பதற்குப் பாக்களெனும் பூக்கள் தந்த எனது மதிப்புக்குரிய நண்பர் அருட்கவி கு.செ.ராமசாமி அவர்களுக்கும், அன்புக்குரிய நா.வீரப்பன் அவர்களுக்கும் உள்ளார்ந்த நன்றியை உரித்தாக்குகின்றேன்.

எனது வேண்டுகோளுக்கிணங்கி முகம் மலரப் பாராட்டி அணிந்துரை வழங்கிய பேரறிஞர், பெரியவர், ஸ்ரீஸ்வாமி விமர்சனானந்தர் அவர்களுக்கு மரியாதையுடன் வணக்கம் செலுத்தி நன்றி கூறுகின்றேன்.

இந்தப் பாமாலை வெளியிடத் தூண்டுகோலாக இருந்த ஸ்ரீசிவபுரிஸ்வாமிகள் அவர்களுக்கும் உயர்திரு. S. A. அண்ணுமலை அவர்களுக்கும்,ஸ்ரீசவேச சிவாச்சாரியார், ஸ்ரீ சுந்தரேசசிவாச்சாரியார், ஸ்ரீ ஞானஸ்கந்தசிவாச்சாரியார் மூவருக்கும், பாமாலைத் தொகுப்புக்கு என் உடனிருந்து உதவிசெய்த அன்புநண்பர்L.இராமமூர்த்திக்குபாமாலையை அழகுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீலஸ்ரீ மஹாஸ்வாமிகளின் பூரண ஆசி பெற்ற சென்னை ஸ்ரீகைலாஷ் பிரிண்டர் ஸாருக்கும் எனது நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலைப் பதிப்பித்தருளிய திரு. V.S.V.ராகவன் அவர் களுக்கும் எங்களுடைய நன்றி உரித்தாகுக.

இந்த அருள்மிகு அம்மன் பாமாலையைப் பெற்றுப்படிப் பவர்க்கும், படிக்கக் கேட்பவர்க்கும், பாமாலைத்தொகுப்பில் பங்கு பெற்ற அனைவருக்கும் ஸ்ரீஅம்பிகையின் திருவருளும் ஸ்ரீலஸ்ரீமஹாஸ்வாமிகளின் பூரண ஆசியும் எப்போதும் இருந்துகொண்டேயிருக்கப் பிராத்திக்கின்றேன்.

ஓம்சக்தி

**L. சோமு**
ஸ்ரீகைலாச ஆஸ்ரமம்
பெங்களூர்-39.

# ஸ்ரீ ஞானாட்சியம்மை பதிகம்

## காப்பு

கயிலாச பீடம் கமழவரும் ஞான
மயில்மீது பாடல் வடிக்க - பயில்கருணைத்
தும்பிக்கை நாதன் துணையே துணை என்று
நம்பிக் கைகூப்புவேன் நான்.

## ஸ்ரீ விநாயகர்

கணேச சரணம்,சரணம் கணேசா
விக்னேச சரணம் சரணம் விக்னேசா
கைலாஸ வாசா சரணம் கணேசா
கங்கா புத்ரா சரணம் கணேசா

மூஷிக வாகன சரணம் கணேசா
மோதகப்ரியா சரணம் கணேசா
வித்யாதிபதியே சரணம் கணேசா
விக்னநிவாரண சரணம் கணேசா
ஆபத்பாந்தவ சரணம் கணேசா

ஆதிமூலமே சரணம் கணேசா
சங்கரன் மகனே சரணம் கணேசா
சர்வமும் நீயே சரணம் கணேசா
முக்திக்குவித்தே சரணம் கணேசா
மூலப் பொருளே சரணம் கணேசா

கணேச சரணம் சரணம் கணேசா
விக்னேச சரணம் சரணம் கணேசா

## மாயா விநோத மயில்

1. சோதியே, சோதிச் சுடர்பிழம் பே, நின்று
துலங்கிடும் திருவிளக்கே!
தொலையா இருட்குலம் தொலையவரு ஞாயிறே,
சுகமாய் விளைந்தநில வே!

ஆதியே,யாண்டும் அநாதியாய் நின்றருளும்
அந்தமில் லாத பொருளே!
அடியார் கரத்திலே, அறிவிலே, வாக்கிலே
அகலா திருந்த திறலே!

மாதர்வடி வாகிய மகாசக்தி யேநான்கு
மறைதேடும் பிரம நிலையே!
வையகம் அனைத்தையும் மையலுற வைத்திடும்
மாயாவி நோதமயி லே!

காதலால் உன்பெருமை ஓதுவேன், ஓதுவேன்
காத்தருள் செய்க எனையே!
கருநாடகத்திலே குடிகொண்ட அன்னையே,
கருணைஞானாட்சி உமையே!

## கருணாகடாட்சி

2. பூமாலை வாடும்ஒரு போதிலே; மணிமாலை
பொன்மாலை வாசம் இலையே!
புண்ணிய மிகும்தீப மாலையும் நெய்யோடு
போய்விடும் நிலையில்லையே!

பாமாலை நிலையாக வாசம் பரப்பும்எனப்
பரிவோடு தீட்டி வந்தேன்!
பலமாலை,காலை,நிசி வேளையும் இசைமாலை
பாதத்தில் சூட்டி வந்தேன்!

ஆமாறு வேறொன்றும் அறியகில் லேன்;என்னை
அர்ப்பணம் என்று தந்தேன்!
ஐயைந்தும் ஐந்தும்அப் பாலுமாம் நீயே
அடைக்கலம் என்று கொண்டேன்!

காமாட்சி,மீனாட்சி,காசியில்வி சாலாட்சி,
கருணாக டாட்சி தாயே!
கருநாடகத்திலே குடிகொண்ட அன்னையே,
கருணைஞா னாட்சி உமையே!

## எங்கும் நீயே

3. பச்சைப் பசுந்தோகை மயிலான போதிலே
பார்வதி என்று தொழுவோம்!
பாலன்ன வண்ணமே நீகொள்ளும் முன்னமே
பாரதி என்று பணிவோம்!

இச்சை தரும்தங்க மானாய் இருக்கையில்
இலக்குமி என்றோதுவோம்!
ஏரார் குயில்நிறம் இலங்கவரில் காளியாய்
ஏத்தியே கொண்டாடுவோம்!

செச்சைத் தொடைபூண்டு பகைவோர் செருக்குண்டு
தீர்க்கும்ஒரு சிங்கமாகத்
தீவண்ண மேனியில் நீவந்த வேளையில்
ஸ்ரீ துர்க்கை வாழி என்போம்!

கச்சிஏ கம்பமோ, கயிலாச பீடமோ-
காணுமிடம் எங்கும் நீயே!
கருநாடகத்திலே குடிகொண்ட அன்னையே,
கருணைஞானாட்சி உமையே!

## எழிற் கவிதை-புகழ்ச் சரிதை

4. அடிதொட்டு முடிவரை அம்மா, உன் திருமேனி,
அமுதாய் விளைந்த வடிவம்!
ஆகாயம் பூமியில் நேரான உவமைகள்
அறியஒண் ணாத படிமம்!

உடைபட்டின் இடைஇடை நவரத்னம்;இரவுபகல்
உருவாக்கும் உனது நயனம்!
ஒருபார்வை பட்டதும் சிவனாரும் உன்னிடம்
ஓடோடி வந்து சரணம்!

முடிவற்ற கருணையொரு வடிவுற்ற வனிதையே,
மூவா எழிற் கவிதையே!
மூவர்க்கும் அன்னையே,பிள்ளையே,கன்னியே,
மொழியும் புகழ்ச் சரிதையே!

கடைபட்ட போதிலும் உனைவிட் டகல்வனோ?
காவாய் கலைச்செல்வியே!
கருநாடகத்திலே குடிகொண்ட அன்னையே,
கருணைஞா னாட்சி உமையே!

## அமுதப்ரவாகம்

ஞானாங் குசம், இச்சை வடிவான பாசமும்
நாயகி நீ எடுத்தாய்!
நாடத் தகும்கிரியை ரூபத்தில் கன்னல்வில்
நறுமலர்க் கணைதரித்தாய்!

ஆனா மறைப்பொருள் தானான போதும் அவை
அறியாத பொருளுமானாய்!
அணிமாதி தேவியர் துதிபாட ஸ்ரீசக்ர
அரியணை தானேறினாய்!

கூனார் இளம்பிறை கதிர்சூடும் கொண்டாலே,
குங்கும மலர்க் குன்றமே!
கொள்ளக் குறைபெறா அமுதப் ரவாகமே,
குலதெய்வ மே,அருளுவாய்!

கானார் மணிக்கிள்ளை போல் வாணிநாரணி
கலந்தோத நின்ற சிவையே!
கருநாடகத்திலே குடிகொண்ட அன்னையே,
கருணைஞா னாட்சி உமையே!

## கவலைக்கு முடிவில்லையா?

6. குடலுக் கிறைத்தது குடலோடு போனதே;
கூவித் திரண்ட சந்தைக்
கூட்டத்தில் இட்டது வேட்டாய் முடிந்ததே;
கொல்லையைக் காக்கும் என்று

படலுக்கு விட்டது பயிரையே தின்றதே;
பசிவேளை உதவுமாறு
பார்த்துநான் சேர்த்தது பதராய்க் கவிழ்ந்ததே;
பற்றிக் கலந்த வேளை

உடலுக் கிதம்தந்த மடமாதும் அரவாக
உருமாறி நெளிகின்றதே;
ஒவ்வொன்றும் இவ்வா றொழிந்தாலும் உன் அன்பில்
உயிர் மூச்சு வளர்கின்றதே!

கடலுக்கும் ஆங்கொரு கரைவைத்த தேவி,என்
கவலைக்கு முடிவில்லையா?
கருநாடகத்திலே குடிகொண்ட அன்னையே,
கருணைஞா னாட்சி உமையே!

## அருள் வெள்ளம்

7\. அன்னையின் முகம்தேடும் பிள்ளையும் பரிந்துரை
ஆளோடு போவதுண்டோ?
அம்மாஅம் மாஎனும் சிம்மாச னத்தைவிட
அர்ச்சனைப் பூவுமுண்டோ?

தன்னையே சரணாய்த் தரும்ஞானம் வந்தபின்
தத்துவப் பேச்சுமுண்டோ?
சக்திஓம் சக்திஎனும் பித்தத்தில் வேறொரு
சாமிமுகம் பார்ப்பதுண்டோ?

என்னதான் வந்தாலும் உன்னைநான் விடுவனோ?
இகம்பரம் உனது வசமே!
ஏகமாய் அன்பாய்என் தாகம் தணிக்க நீ
எழுவாய் அருள்வெள்ளமே!

கன்னியர்கள் எழுவரொடும் எண்ணரிய சக்திகள்
கைகூப்ப நின்ற பரையே!
கருநாடகத்திலே குடிகொண்ட அன்னையே
கருணைஞா னாட்சி உமையே!

## கருத்தினில் பூத்தமலர்

8. சொல்லும்என் வாய்ச்சொற்கள் எல்லாமுன் மீதிலே
தோத்திரம் ஆகட்டுமே!
துடியாய்த் தினம்புரியும் செயல்யாவும் பூசனைத்
தொழிலாக மாறட்டுமே!

மெல்லஎன் வாயால் விழுங்குவன அம்மா,உன்
வேள்வியாய்ப் போகட்டுமே!
மேலும்என் சுகபோகம் யாவுமுன் விழாக்களாய்
மேன்மைகள் காணட்டுமே!

எல்லாமுன் கோலமே,எல்லாமுன் சீலமே
எல்லாம் அருள்வண்ணமே-
ஏதுவரும் ஆயினும்தேவியுன் திருஉள்ளம்
ஈதெனது கவியுள்ளமே!

கல்லினுள் பூத்துவரும் கனகமா மலராய்க்
கருத்தினில் பூத்த மலரே!
கருநாடகத்திலே குடிகொண்ட அன்னையே,
கருணைஞா னாட்சி உமையே!

## கண்கண்ட தெய்வம்

9. எங்கும் திருக்கண்கள்;எங்கும். திருச்செவிகள்;
எங்கும் திருத்தோள்களாம்!
எங்கும் திருக்கைகள்;எங்கும் திருக்கால்கள்;
எங்கும் திருத்தாள்கலாம்!

எங்கும் திருக்காட்சி; எங்கும் அருள்மாட்சி;
எங்குமுன் அரசாட்சியாம்!
எங்கும்எங் கெங்கும் இலங்கும்உன் ஆணையில்
எழுபுவி சுழன்றாடுமாம்!

எங்குமுள சக்தியே, இங்கெனது பார்வையில்
எழுந்துவர மனமில்லையோ?
எல்லாம் அறிந்தநீ சொல்லாமல் என்குறை
ஈடேற்றும் திறமில்லையோ?

கங்கைபுனல் வற்றுமோ; திங்கள் அனல் கொட்டுமோ?
கண்கண்ட தெய்வம் இலையோ?
கருநாடகத்திலே குடிகொண்ட அன்னையே
கருணைஞா னாட்சி உமையே!

## சிவசக்தி

10. ஆதார சக்தியாய் அண்டபகி ரண்டங்கள்
அரசாளும் ராஜேஸ்வரி!
அங்குசம் பாசம் கரும்புவிற் கணைதாங்கி
அருள் செய்யும் ராஜேஸ்வரி!

மாதா எனைத்தாங்கும் மகராணி நீஎன
வாழத்துவேன் ராஜேஸ்வரி!
மஞ்சள்முகம் காட்டிஎன் நெஞ்சில்ஒளி தேக்கவே
வருவாயே ராஜேஸ்வரி!

பாதார விந்தமே துணையாய்ப் பசுந்தமிழ்
பாடுவேன் ராஜேஸ்வரி! பதினாறு
பேறுகளும் அடியேனும் பெறுமாறு
பாலிப்பாய் ராஜேஸ்வரி!

காதோலை ஸ்ரீசக்ரம் காலடியில் மேருவாய்க்
காட்சிதரும் சிவசக்தியே!
கருநாடகத்திலே குடிகொண்ட அன்னையே
கருணைஞா னாட்சி உமையே!

# இன்பமே எந்நாளும்

11. அன்னாய், உன் மஞ்சளும் அபிஷேக தீர்த்தமும்
அன்றாடம் தந்தருளுவாய்!
அடியேன் வினை,பகை,பசி,நோய் அகற்றியே
அருகிலே நின்றாளுவாய்!

என்னாணை யாவையும் இறைவி,உன தாணையாய்
இதயம் கனிந்தருளுவாய்!
ஏழைமன வீட்டிலும் எழுதுகவி ஏட்டிலும்
எந்நாளும் ஆடல்புரிவாய்!

தென்பால் இளங்குமரி,வடபால் விசாலி, இரு
திசையும் பவானி,காளி-
திருநாடு முழுவதும் தனதாய் உலாவிவரும்
ஸ்ரீராஜ ராஜேஸ்வரி!

கன்றாக நின்பால் கசிந்துருகும் இன்பம்எக்
காலமும் உவந்தருளுவாய்!
கருநாடகத்திலே குடிகொண்ட அன்னையே
கருணைஞா னாட்சி உமையே!

- அருட்கவி கு.செ இராமசாமி, எம்.ஏ.,

## ஸ்ரீசக்தி, சிவசக்தி, ஓம் சக்தி

ராஜேஸ்வரி அம்மா பரமேஸ்வரி
புவனேஸ்வரி அம்மா ஜெகதீஸ்வரி
ஸ்ரீசக்ர வடிவத்தில் ராஜேஸ்வரி
சிவசக்தி ரூபத்தில் பரமேஸ்வரி
ஓம்சக்தி ஓம்சக்தி ராஜேஸ்வரி
உலகாளும் மாசக்தி பரமேஸ்வரி

அருளாளர் நெஞ்சங்கற் சிம்மாசனம்
அறுபத்து நான்குகலை வெண்சாமரம்
ஒருநான்கு வேதங்கள் சங்கீர்த்தனம்
ஓங்கார நாதமம்மா உன் தாண்டவம்

பூவுக்கும் பொட்டுக்கும் துணையானவள்
பொன்மஞ்சற் குங்குமத்தில் நிலையானவள்
சேவிக்கும் பெண்களுக்குத் தாயானவள்
திருமாங்கல்யம் என்னும் வாழ்வானவள்

குளம் போல நெய்யூற்றி விளக்கேற்றுவோம்
கும்பத்தில் பிம்பத்தில் குடியேற்றுவோம்
வளம் யாவும் தரவேண்டி மலர்தூவுவோம்
மகராணி நீ என்றுக் கவிபாடுவோம்.

தீபத்தில் குடிகொண்ட ராஜேஸ்வரி
திலகத்தில் முகம் காட்டும் ஜெகதீஸ்வரி
ஆபத்தில் ஓடி வரும் ராஜேஸ்வரி
அருள் செய்ய வேணுமம்மா நீயேகதி!

கு.செ.ராமசாமி,M.A.,

## 3. ஸ்ரீ முருகன்

ஆலோலம் பாடு குறவள்ளியம்மைக் கழுத்தில்
அணியாரமிட்ட பெருமான்
ஆகாயம் பூமியிடை நீராவி போல் வடிவில்
ஆதாரமான பெருமான்
மேலாளர் கீழாளர் பேதங்களில்லாது
மெய்யாள வந்த பெருமான்
மின்னாகி இடியாகி மழையாகி காற்றாகி
விளைவாக நின்ற பெருமான்
கோலாலம்பூரில் வறர்கோள் தெண்டபாணி இவற்
கோவில் கொண்டாடு மனமே
கூற்றேதும் வாராது கொடுநோயும் சேராது
குறையாது வாழ்வு மிகுமே
ஓம் என்ற சிறுமுட்டை உன்வீடு அவர்வீடு
உன்வீடும் அந்த இடமே
ஓசைக்கு மணியுண்டு பூசைக்கு மணம் உண்டு
உன் வாழ்வு கந்தன் வசமே
நாமென்ற ஆங்காரம் நமதென்ற ஏக்காளம்
நடவாது வேலனிடமே
நடக்கட்டும் பார்ப்போம் மென்றிருக்கட்டும் உன் உள்ளம்
நலம் யாவும் வீடு வருமே
கோமன்னன் வாழ்கின்ற கோலாலம்பூர் செந்தூர்
கொடிகட்டி ஆளவிடுமே
கொண்டாடு கொண்டாடு தெண்டா யுதத்தானை
குறையாத செல்வமிகுமே

கவியரசு கண்ணதாசன்

## 4. ஸ்ரீ ஸ்ரீ திருச்சி சுவாமிகள்:

1. பால்குடத்தை தலையிலேந்தி
பக்தரெல்லாம் ஒன்று சேர்ந்து
ஓம் சக்தி என்று சொல்லி ஓடி வாருங்கள்
ஓங்கார நாயகியைக் காணவாருங்கள்
(பால் குடத்தை)

2. கண்ணீரைத் துடைத்திடுவாள்
கவலையெல்லாம் போக்கிடுவாள்
கருணைஉள்ள தெய்வம்
அவளைக் காணவாருங்கள்
உங்கற் கனவெல்லாம் நினைவாகும்
நேரில் பாருங்கள்
(பால் குடத்தை)

3. சித்து பல கற்றவராம்
தேவி அருள் பெற்றவராம்
திருச்சி மகா சுவாமிகளைப்
பார்க்க வாருங்கள்
அவர் திருவடியைப் பணிந்து வரம்
கேட்க வாருங்கள்
(பால் குடத்தை)

4. திரிசூலம் உடனிருக்க
தேவியைப் போல் அவர் இருந்து
அருள் வழங்கும் அழகைக் காண
ஓடி வாருங்கள்-அந்த
அற்புதத்தை நீங்கள் வந்து
நேரில் பாருங்கள்

(பால் குடத்தை)

5. சிற்பம் நிறை ஆலயத்தில்
சிங்கார மண்டபத்தில்
தேவி அவள் கொலுவிருக்கும்
அழகைப் பாருங்கள்
அவள் திருவருளைப் பெறுவதற்கு
விரைந்து வாருங்கள்

(பால் குடத்தை)

6. கேட்ட வரம் தந்திடுவாள்
கேடுகளை நீக்கிடுவாள்
கருநாடகத்திலே
கோவில் கொண்டவள்
இந்த கலியுகத்தைக் காக்க
வந்த தெய்வத் தாய் அவள்

(பால் குடத்தை)

லெ.சோமு

## 5. வந்து அருள் தந்திடுவாய்

1. மெய்யாய் உலகனைத்தும் ஈன்றெடுத்தும் மெய்தளரா
தையல் வடிவுடைய தாயே ஸ்ரீ ஞானாக்ஷி,
தெய்வத் திருமகளே சிந்தூரக் கலையுடுத்தி
வையம் கனிந்திடவே வந்து அருள் தந்திடுவாய்.

2. உண்ணும் போதுறங்கும் போதுன்னருளையன்றிமனம்
எண்ணுவது வேறில்லை என்தாயே ஞானாக்ஷி
கண்ணுறங்கும் போதுமெந்தன் கருத்திருக்கும்
உன்னடியில்
வண்ணக் கொடிமலரே வந்துஅருள் தந்திடுவாய்

3. பூவிலே உன்மனமும் பொன்னிலே உன்குணமும்
நாவிலே உன்கலையும் நானறிவேன் ஞானாக்ஷி
ஆவியிலே கலந்துருகி அன்புருவாய் வீற்றிருக்கும்
தேவிஉனைத் தெரியாதோ வந்துஅருள் தந்திடுவாய்

4. பிள்ளை அழுதால் பெற்றதாய் முன்வந்து
அள்ளி அணைக்காமல் அவள்விலகி நிற்பாளோ
துள்ளி அமுதூட்ட துடிக்கின்ற ஞானாக்ஷி
வெற்றி முறுவலுடன் வந்துஅருள் தந்திடுவாய்

5. தண்ணீரிலே படகு தங்கலாமே தவிர
தண்ணீர் படகுக்குள் தங்கினால் என்னாகும்
கண்ணாலே காண்பதெல்லாம் கனவாகு மென்றுதள்ளி
உன்நாமம் கைக்கொண்டேன் வந்து அருள் தந்திடுவாய்

6. இச்சகத்தின் கோட்டையிலே ஏழடுக்கு மாடியிலே
கச்சிதமாய் வாழ்ந்தாலும் காப்பவளே நீயன்றோ
உச்சியிலே கொடியேற்றி உருண்டுவரும்தேரினுக்கு
அச்சாணி நீயன்றோ வந்து அருள் தந்திடுவாய்

7. சோதி மணிச்சுடரே சுந்தரியே கற்பகமே
தூண்டா மணிவிளக்கே என்தாயே ஞானாக்ஷி
சின்னஞ்சிறு குழந்தை செய்வதொன்று மறியேன்
கண்ணின் கருமணியே வந்துஅருள் தந்திடுவாய்

8. கங்கைச் சடைமுடியோன் பங்கிலிடம் கொண்டவளே
திங்கள் முகமுடைய தேவீயென் ஞானாக்ஷி
சங்கரர் கீடாக சதிராடும் நாயகியே
பங்கமின்றி வாழ்வதற்கு வந்துஅருள் தந்திடுவாய்

9. உன்னைச் சரணடைந்தேன் உன்னருளை வேண்டுகின்றேன்
உலகாளும் நாயகியே என்தாயே ஞானாக்ஷி
விளையாட்டுப் பொம்மையென விதிவழியே
ஆடுகின்றேன்
சிலையாக இல்லாமல் வந்துஅருள் தந்திடுவாய்

லெ.சோமு

## 6. காலமெல்லாம் உன் துணை வேண்டுகின்றேன்

1. உன்னெழில் கோலம் என்னிரு கண்ணில்
 என்று தெரிந்திடுமோ
 உன்மலர்ப் பாதம் என் தலைமீது
 என்று பதிந்திடுமோ
 (உன்னெழில் கோலம்)
2. அன்னை உன்னருளால் என்னை மறந்து
 இருந்திடும் நாள் வருமோ
 பொன்னையும் பொருளையும்
 பூமியின் வாழ்வையும்
 வெறுத்திடும் நாள் வருமோ - அம்மா
 வெறுத்திடும் நாள் வருமோ
 (உன்னெழில் கோலம்)
3. ஆசை என்னும் பேய்தனை விரட்டி
 அருள்தர வருவாயா?
 அலைகடல் போல அலையும் என் வாழ்வில்
 அமைதியைத் தருவாயா?-அம்மா
 அமைதியைத் தருவாயா?
 (உன்னெழில் கோலம்)
4. உலையினில் இட்ட மெழுகாய் நானும்
 உருகித் தவிக்கின்றேன்
 உன்னருள் வேண்டி ஒவ்வொரு நாளும்
 பாடித் துதிக்கின்றேன்-அம்மா
 பாடித் துதிக்கின்றேன்
 (உன்னெழில் கோலம்)
5. ஊரும் பேரும் உறவும் வேண்டேன்
 உன்னருள் வேண்டுகின்றேன்
 உலிகினில் இருக்கும் காலம் வரைக்கும்
 உன் துணை வேண்டுகின்றேன்-அம்மா
 உன் துணை வேண்டுகின்றேன்:
 (உன்னெழில் கோலம்)

லெ. சோமு

## 7. எந்தனோடு வாழ்வுமாகி என்றும் தங்குவாய்

1. கந்த வீரமா காளிகமர மங்கலை
   கருணையான வடிவழகி கனிந்து நின்றனை
   விந்தையாகி விளக்குமாகி விளங்கி வந்தனை
   விண்ணுமாகி மண்ணுமாகி வெற்றி கண்டனை

2. மந்தமான புத்தி ஓட்டி மனமும் தந்தனை
   மலரில் தேனும் உன்னைப்பாட மயக்கம் தீர்ந்தனை
   சொந்தமான ஞானாக்ஷி இந்த நாள் முதல்
   எந்தனோடு வாழ்வுமாகி என்றும் தங்குவாய்

3. நந்த வீரமா காளி நயன மாலினி
   நம்பி வந்த எம்மிடையே நலனும் காட்டுவாய்
   இந்த வாழ்வில் உன்னையன்றி இங்கு யாருளார்
   இன்று நல்ல காலை வந்து இனிமை கூட்டுவாய்

4. மந்தையாடு போல வாழ்வில் மயங்கி நில்லாமல்
   முக்தியோடு செல்ல போகம் முழுதும் காட்டுவாய்
   சொந்தமான ஞானாக்ஷி இந்த நாள் முதல்
   எந்தனோடு வாழ்வுமாகி என்றும் தங்குவாய்

5. பொங்கு வீரமா காளி பொய்மை தீர்மனி
   பொறுமையோடு பெருமையாகிப் பொருளும் கூட்டினாய்
   எந்தையான சிவனை தூது எடுத்து அனுப்பினாய்
   எழிலியாகி எண்ணமாகி என்னுள் பாடினாய்

6. பந்தணைந்தவிரலில் நீயும் பகைமை என்றதும்
பறந்து வந்து படைகளோட்டி பசுமை காட்டினாய்
சொந்தமான ஞானாக்ஷி இந்த நாள் முதல்
எந்தனோடு வாழ்வுமாகி என்றும் தங்குவாய்

7. விந்தை வீரமா காளி விரைந்து வந்திடின்
தொந்த நோயும் வந்த நோயும் தொலைவில் ஓடிடும்
எந்தமாயம் என்னைத் தேடிவந்த போதிலும்
என்னை ஈன்ற தாய் நினைப்பில் எரிந்து போய்விடும்

8. சிந்தை வாழும் உந்தன் மஞ்சள் சிறிது பூசிடின்
கந்தனோடு கரிய நீலகண்டன் காணலாம்
சொந்தமான ஞானாக்ஷி இந்த நாள் முதல்
எந்தனோடு வாழ்வுமாகி என்றும் தங்குவாய்

## 8. நிம்மதியைத் தந்திடவே வருவாய் அம்மா

1. செவ்வரளிப் பூவெடுத்து சிந்தையிலே உனை வைத்து
செந்தமிழில் சொல்லெடுத்து நான் பாடுவேன்-அம்மா
சித்து விளையாடிடவே வருவாய் அம்மா
(செவ்வரளிப் பூவெடுத்து)

2. கைநிறைய மலரெடுத்து கண்களுக்குள் உனை வைத்து
கன்னித் தமிழ் சொல் எடுத்து நான் பாடுவேன் அம்மா
கருணை மழை பொழிந்திடவே வருவாயம்மா
(செவ்வரளிப் பூவெடுத்து)

3. பந்தமுண்டு பாசமுண்டு சொந்தமுண்டு சுற்றமுண்டு
அத்தனையும் மறந்து உன்னை நான் பாடுவேன் அம்மா
ஆறுதலை தந்திடவே வருவாய் அம்மா
(செவ்வரளிப் பூவெடுத்து)

4. நெற்றியிலே திலகம் வைத்து நெஞ்சமதில் உனைவைத்து
நித்தம் நித்தம் உன் புகழை நான் பாடுவேன் அம்மா
நிம்மதியைத் தந்திடவே வருவாய் அம்மா
(செவ்வரளிப் பூவெடுத்து)

5. பச்சரிசி பொங்கலிட்டுப் பக்தியுடன் பூசைசெய்து
பழகுதமிழ் சொல்லெடுத்து நான் பாடுவேன் அம்மா
பாலன் என்னைக் காத்திடவே வருவாய் அம்மா
(செவ்வரளிப் பூவெடுத்து)

6. அழகான கலசம் வைத்து அருகில்ஒரு தீபம் வைத்து
அன்னை உந்தன் திருப்புகழை நான் பாடுவேன் அம்மா
அருள் வாக்குத் தந்திடவே வருவாய் அம்மா
(செவ்வரளிப் பூவெடுத்து)

7. மணமென்னும் மேடையிலே மகராசி உனை வைத்து
மாதா உன் திருப்புகழை நான் பாடுவேன் அம்மா
மங்களங்கள் தந்திடவே வருவாய் அம்மா!
(செவ்வரளிப் பூவெடுத்து)

லெ.சோமு

## 9. காலமெல்லாம் நமக்குத் துணையாவாள்

ஒருகோடி சந்திரனின் ஒளியானவள்
உலகாளும் ஞானாக்ஷி வடிவானவள்
கருவாக்கி உருவாக்கி நமைக்காப்பவள்
காலமெல்லாம் நமக்குத் துணையானவள். (ஒரு)

நாதத்திலே கலந்த இசையானவள்
நானென்ற மமதைக்கு எதிரானவள்
வேதத்திலே விளங்கும் பொருளானவள்
வேதனை தீர்க்கும் நல் மருந்தானவள் (ஒரு)

குறையாது அருள்வழங்கும் குருவானவள்
குலம்காத்து நலம்காக்கும் திருவானவள்
ஓமென்ற மந்திரத்தின் பொருளானவள்
ஊனாகி உடலாகி உயிரானவள் (ஒரு)

பூவாகிக் காயாகிக் கனியானவள்
பொங்கும் அருட்கடலின் வடிவானவள்
சேயாக்கி எனையெடுத்துச் சீராட்டுவாள்
சிந்தையெல்லாம் குளிரத் தாலாட்டுவாள். (ஒரு)

லெ. சோமு

## 10. ஆலயத்தைச் சுற்றிவந்தால் அருள் கிடைக்கும்

ஆலயத்தைச் சுற்றிவந்தால் அருள் கிடைக்குமடி
அம்மா உன் கண்பார்த்தால் பொருள் கிடைக்குமடி
தீராத வினைகள் எல்லாம் தீர்த்து வைப்பவளே
மாறாத மனத் துயரை மாற்றிவைப்பவளே

ஏழுலகை ஆளுகின்ற ஈஸ்வரிதாயே
எங்கள் குலம் காத்துநிற்கும் தெய்வமும் நீயே
தேவாதி தேவிஉனைத் தேடி வருகிறோம்
திருவருளை வேண்டுமென்று கேட்கவருகிறோம்
-ஆலய

பூமியாக உருவெடுத்து பொறுத்திருப்பவளே
பொங்கும் கடலை ஆடையாக உடுத்திருப்பவளே
சந்திரனும் சூரியனும் உன்னிருகண்கள்
சங்கரி உன்ஆபரணம் நான்கு வேதங்கள்
-ஆலய

அர்த்தனாரியாக நின்று அருள்புரிபவளே
அண்டிவரும் பக்தருக்கு வாழ்வளிப்பவளே
ஸ்ரீசக்ரபீடமதில் வீற்றிருப்பவளே
சிவபெருமான் சக்தியாக வடிவெடுத்தவளே
-ஆலய

லெ. சோமு

## 11. தயைபுரிந்தே எனை வாழ வைப்பாய்

உறவை மறந்தாலும் உணவை மறந்தாலும்
உன்னை நான் மறப்பதில்லை.
கனவிலும் நீயே நினைவிலும் நீயே
கருணை செய்வாயே ஞானாக்ஷி.

என் உடல் உயிர்யாவும் உனதல்லவா
நான் உலகினில் வாழ்வதுன் செயலல்லவா
கண்ணில் வழிந்தோடும் நீர்துடைத்துஎனைக்
காத்தருள் செய்வதுன் கடனல்லவா -உறவை

வேதனையோ இன்னும் தீரவில்லை அம்மா
வேறொரு வழியும் தெரியவில்லை
ஆதரவோ டென்னை காத்தருள்வாய் அம்மா
அருள்புரிந்தே யெனை ஆதரிப்பாய் -உறவை

பிஞ்சுமனம் எந்தன் பேதைமனம் உனைப்
பிரிய நினைக்காத வெள்ளைமனம்
தஞ்சமென்றே நான் உனை அடைந்தேன்
தயைபுரிந்தே எனை வாழவைப்பாய் -உறவை

லெ. சொமு

## 12. ஸ்ரீ அம்பாள்

அம்மா மதுரை மீனாக்ஷி
அருள்வாய் காஞ்சி காமாக்ஷி
அன்பாய் என்னை ஆதரித்து
அல்லல் களைந்து காப்பாற்று

அன்னை தேவி பராசக்தி
என்னைப் படைத்தது உன்சக்தி
வாழ்வைத் தந்து வளம் தந்து
வாழ்க்கைக் கடலின் கரையேற்று

தில்லைச் சிதம்பரம் பத்தினியே
நெல்லையில் வாழும் உத்தமியே
திருவடி மலரினைத் தொழுதிடுவேன்
திருவருள் புரிந்தென்னைக் காப்பாற்று

ஓங்காரப் பொருள் நீதானே
உலகம் என்பதும் நீதானே
காணும் இயற்கைக் காட்சிகளும்
காற்றும் மழையும் நீதானே.

அம்மா தாயே உனை வேண்டி
அழுதிடும் என்னைத் தாலாட்டி
அன்புடன் ஞானப் பாலூட்டி
அகத்தின் இருளைப் போக்கிடுவாய்.

உள்ளக்கோயில் உன் கோயில்
உயிரும் மூச்சும் உன் வடிவம்
பேச்சும் செயலும் உன் செயலே
பெருகச் செய்வாய் பேரருளே!

- லெ.சோமு

## 13. ஸ்ரீ ஞானாட்சிதேவிக்கு எத்தனை அலங்காரம்

எத்தனை அலங்காரம் சத்திய தேவிக்கு
எத்தனை அலங்காரம் என்குல
தெய்வம் ஞானாக்ஷி அன்னைக்கு
எத்தனை அலங்காரம்

சித்தம் போற்றும் சிவனார் துணைவிக்கு
எத்தனை அலங்காரம்
சிறுமி அலங்காரம் சிவனுக்கு
அன்னம் அளித்திடும் அலங்காரம்

காளியலங்காரம் கண்களைக்
கவர்ந்திடும் காய்கறி அலங்காரம்
திரிசூலி அலங்காரம்
தேவாதி தேவிக்கு எத்தனை அலங்காரம்

சந்தன அலங்காரம்
சகல நலம் தரும் ஸாமுண்டியலங்காரம்
சற்குரு நாதன் வழிபடும் தேவிக்கு
எத்தனை அலங்காரம்

மங்கலச் செல்வி அங்கயற்கன்னிக்கு
மீனாக்ஷி அலங்காரம்
மாங்கல்யம் காக்கின்ற ஞானாக்ஷிதேவிக்கு
எத்தனை அலங்காரம்

கருணையின் வடிவம் கற்பகவல்லிக்குக்
காமாக்ஷி அலங்காரம்
கலியுக தெய்வம் ஞானாக்ஷிதேவிக்கு
எத்தனை அலங்காரம்

சக்தியின் வடிவம் சங்கரன் துணைவிக்கு
சரஸ்வதி அலங்காரம்
சாந்தி நலம் தரும் ஞானாக்ஷிதேவிக்கு
எத்தனை அலங்காரம்

கோடி நலம் தரும் கோமகள் அவளுக்கு
குங்கும அலங்காரம்
கொற்றவை எங்கள் ஞானாக்ஷிதேவிக்கு
எத்தனை அலங்காரம்ண

தாரணி போற்றிடும் தலைமகள் அவளுக்குத்
தாடங்க அலங்காரம்
தர்மத்தைக் காக்கின்ற ஞானாக்ஷிதேவிக்கு
எத்தனை அலங்காரம்

வெள்ளி அலங்காரம் வேலவன் அன்னைக்கு
விதவித அலங்காரம்
வெற்றியைத் தந்திடும் ஞானாக்ஷிதேவிக்கு
எத்தனை அலங்காரம்!

லெ.சோமு

## 14. ஆதிபராசக்தி அம்மா அருள்வாய்

ஆதிபராசக்தி அம்மா அருள்வாய் தாயே-நீ
தேவிபராசக்தி உன்னைத் தேடி சரணடைந்தோம்
- அம்மா
தேடி சரணடைந்தோம்
(ஆதிபராசக்தி)

காஞ்சியிலே நீ காமாட்சி
காசியிலே நீ விசாலாட்சி
மதுரையிலே நீ மீனாட்சி
கருநாடகத்தினில் ஞானாட்சி
(ஆதிபராசக்தி)

ஆனைமுகனின் அன்னை அம்மா
அறுமுகனும் உன் பிள்ளையம்மா
சுடலைநாதனின் பாதியம்மா
சுடலைலே முழு ஜோதியம்மா
(ஆதிபராசக்தி)

எல்லையில்லா தொல்லைகளும்
தில்லைவந்தால் தீர்ந்துவிடும்
எல்லை காளி சக்தியடி
தில்லை காளி வாடியம்மா
(ஆதிபராசக்தி)

காட்டுத் தீயில் காளியம்மா
வீட்டுத் தீயில் தீபம்அம்மா
ஏற்றித் தொழுவோர் யாவரையும்
போற்றிக் காப்பாய் சக்தியடி

வேப்பிலையில் நீ மாரியடி
கருவேப்பிலையில் நல்வாசமடி
விருந்தினர்க்கு அன்னமடி
நெருங்கினவர்க்குச் சொந்தமடி
(ஆதிபராசக்தி)

- N. வீரப்பன்

## 15.காஞ்சனபுரம் வாழ் ஸ்ரீ ராஜராஜேஸ்வரி

பட்டாடை மினு மினுக்க
பாவாடை சிலு சிலுக்க
பச்சயிளங் குழந்தை வந்தாள் ராஜேஸ்வரி
தண்டைக்கால் கல கலங்க
தங்கவளை குலு குலுங்க
தரணியிலே கோயில் கொண்டாள் ராஜேஸ்வரி

காஞ்சன புரியினிலே கலைமிகுந்த கோயிலிலே
கலியுகத்தைக் காக்கவந்தாள் ராஜேஸ்வரி
கன்னடத்து நாட்டினிலே வாழும் மக்கள் வீடுகளில்
ஓடி விளையாடும் பிள்ளை ராஜேஸ்வரி
ராஜேஸ்வரி அம்மா ராஜேஸ்வரி
ராஜேஸ்வரி அம்மா ராஜேஸ்வரி.

மஞ்சள் பூசித் திலகம் இட்டு
மலராலே மாலையிட்டு
மங்களமாய் வீற்றிருப்பாள் ராஜேஸ்வரி
கெஞ்சிவரம் கேட்டு விட்டால்
கொஞ்சம் கூடத் தயங்கிடாமல்

நெஞ்சம் குளிரத்தந்திடுவாள் ராஜேஸ்வரி
ராஜேஸ்வரி அம்மா ராஜேஸ்வரி
ராஜேஸ்வரி அம்மா ராஜேஸ்வரி.

- N. வீரப்பன்

## கருநாடகத்திலுறையும்
## ஸ்ரீ ஞானாட்சிப் பாமாலை

சிந்தூரம், குங்குமம்,செவ்வானம்,அவ்வானம்
திகழவரு கதிரின் உதயம்,
தேசுமிகு மாணிக்கம், திருஏறு கமலம் அச்
செங்கமலம் அஞ்சு பவழம்,
மந்தாரம், மழைநாளில் வரும் இந்த்ர கோபம், அவ்
வண்டூரும் மலையில் நறவம்,
மான்மதம்,செங்குருதி போன் மலரும் மாதுளம்
மாதுளம் சிதறு முத்தம்,
செந்தீயின் வண்ணம் என வேசொல்லு (ம்) மேனியும்
செப்பரிய அழகு வடிவம்,
சிங்கா தனத்திலும் சிவனார் மனத்திலும்
சீர்கொண்டிலங்கும் எனினும்
எந்தாய்நின் பேர்சொல்லுஷ் ஏழையேன் அறிவிலும்
என்றென்றும் திகழ அருள்வாய்!
இறைவிஎனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே 1

தேறாத கவிஎனிலும் மாறாத காதலால்
திருமுன்பு சாற்று கின்றேன்!
சிந்தை அணு ஒவ்வொன்றும் தேவி உன தேஆகச்
செய்தமிழ் பாடுகின்றேன்!
ஆறாத துயருக்கும் அகலாத கவலைக்கும்
ஆரை நான் நொந்து கொள்வேன்?
அறியாத பிழைசெய்து சரியாக வதைபட்ட
அவலத்தை எங்கு சொல்வேன்!
நீறாக வேநிருதர் புரம் மூன்றும் செற்றஉனை
நெஞ்சாரப் போற்று கின்றேன்!
ஈறேதும் இல்லாத இன்பவடி வாகஎன்
இதயதள மீதும் ஒளிர்வாய்!
இறைவிஎனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே 2

சீரார் பெருந்துறையில் சிவயோக நாயகி
சிவகாமி தில்லைமன்றில்,
தென்குமரி பகவதி, திருவானைக் காவினில்
திகழும் அகி லாண்டேச்வரி,
காரார் மதிற்கச்சி காமாட்சி அங்கயற்
கண்ணிசெந் தமிழ்மது ரையில்
கங்கைவள நாடுடைய நங்கை விசாலாட்சி,
காளிவங்காள மண்ணில்,
ததாரார் சிவன் தோளும்தமிழும் விழைபவள்
சமயபுரம் அதனில் மாரி
தட்டாமல் கடவூரில் பட்டருக் கருள்செய்த
தையல் அபிராம வல்லி,
ஏரார் மழைக்கண்ணி எண்ணரிய நின்கோலம்
யாவும்எமை ஆள வலவோ?
இறைவிஎனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே 3

வானமும் பூமியும் மாறினும் மாறாத
வாய்மைவடி வான தேவி
வழிபாடு செய்பவர் குறைபாடு தீர்த்தின்ப
வாழ்வுதரும் ஆதி தேவி
தேனுமாய் அமுதமாய்ச் சித்தத்தி லேநின்று
தித்தித் தினிக்கும் தேவி
சேராரின் மார்பை இரு கூறாக வேசெய்யும்
திரிசூலம் ஏந்து(ம்)தேவி
கானமும் சிற்பமும் கலைமலர் பலப்பலவும்
காணிக்கை கொள்ளும் தேவி
கற்பனையும் ஒப்பனையும் காலம் ஒரு மூன்றும்
கடந்தஎம் தேவ தேவி
ஈன மொன் றண்டாத ஞானமா தேவி உனை
என்சொல்லி வாழ்த்து வோம்யாம்!
இறைவினை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே 4

மூவர்க்கும் தேவர்க்கும் யாவருக்கும் மேலான
முதல்வி, முக் கண்ணி போற்றி!
முறையாகத் தொழுவோர்க்குத் துணையாகி வழிகாட்டும்
முத்தமிழ்ச் செல்வி போற்றி
நாவுக்கும் நெஞ்சுக்கும் நலம்தந்(து) இனிக்கிற
நாதாந்த சக்தி போற்றி!
நான்என்றும் எனதென்றும் நலியாத நிலைசேர்க்கும்
ஞானப்பூங் கோதை போற்றி!
பாவுக்கும் பூவுக்கும் பாதம் பெயர்த்தருளும்
பாண்டிமா தேவி போற்றி!
பணிவார்தம் துயரோடு பிணியாவும் பொடியாக்கும்
பரமகல் யாணி போற்றி!
ஏவல்கொண் டுலகுபல காவல்செய் அன்னை நின்
இணையடிகள் போற்றி! போற்றி!
இறைவினை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே
(போற்றி போற்றி) 5

பொன்னும்நீ நான்தேடும் பொருளும்நீ புகழும்நீ
போகங்கள் யாவும் நீயே
புறமும்நீ அகமும்நீ புவியெங்கும் நான்காணும்
பொலிவுநீ போதம் நீயே!
முன்னும்நீ நடுவும்நீ முடிவும்நீ முடிவிலா
முழுமைநீ ஞானம் நீயே
முதுமைநீ இளமைநீ மோகம்நீ தாகம்நீ
மோனம்நீ கானம் நீயே!
மண்ணும் நீ தான்எனது வாழ்வென்று வளம் என்று
மனமுருகி நின்ற தெல்லாம்
வஞ்சமோ? எனதுயர் கொஞ் சமோ? இவ்வாறு
மறப்பதும் ஒரு நெஞ் சமோ?
இன்னும் நீ சற்றும் இரங்கா திருந்திடில்
என்னுயிர் இனிமிஞ் சுமோ?
இறைவிஎனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே 6

ஆயிரம் இதழ் கொண்ட தாமரை மலரிலே
அழகாக வீற்றி ருப்பாய்!
அங்குசம் பாசம் கரும்புவில் ஐங்கணை
அங்கையில் ஏற்றி ருப்பாய்
வேயின் குழல்முழவு வீணைநா தச்வரம்
மேவுமிசை கேட்டி ருப்பாய்!
விறலியர் நடம்புரிய வேறுவே றானகலை
விந்தைகள் நயந்தி ருப்பாய்!
ஞாயிறு முதற்பிரமன் நாரணன் துதித்திடவும்
ஞாலமுழு தாண்டி ருப்பாய்!
நாடிவரும் அன்பர்க்குக் கோடிநலம் தந்துலகில்
நலிவின்றிக் காத்திருப்பாய்!
ஈயென இரந்துன்னை வேண்டவும் வேண்டுமோ
எனையும்நீ ஆதரிப்பாய்!
இறைவிஎனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே! 7

கொடியேறு தேர்களிடைக் கொய்யுளை வெண்புரவி
குஞ்சரம் உலவு வாசல்
குமுதவாய் மாதரும் அமுதவாய்ப் பாணரும்
கூடிவரும் அழகு வாசல்
கடியேறு மஞ்சளொடு குங்குமம் சந்தனம்
கவிமணம் நிறைந்த வாசல்
கள்ளமொன் றில்லாத உள்ளமுடை யார்க்கெலாம்
கதவுகள் திறந்த வாசல்
வடிவேறு திருமகள் மணாளனோடு வானவர்
மணிகொண்ட முடிகள் படிய
மங்காத நவமணிகள் எங்கெங்கும் சிதற ஒளி
மயமாய் விளங்கும் வாசல்
இடியேறு முரசொலி எழும்வாசல் அன்னை நீ
எழுந்தருளும் கோயில் வாசல்!
இறைவிளனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே! 8

நினையாத நெஞ்சம் நினைத்து உன்நாமம்
நிகழ்த்திஅறி யாத நாவும்
நேர்வந்து காணாத கண்ணும், நின் சீர்களை
நேயஞ்செய் யாத செவியும்,
மனைவாழ்வு செல்வம் வழங்கும் உனை நாளும்
வணங்கித் தொழாத கையும்
மானுடரும் வானவரும் சூழவரும் நின்கோயில்
வலம்செய்கி லாத காலும்,
தினையான பொழுதும் உனைச் சித்தமிசை வைத்திலாச்
சிறுவாழ்வும், பெருந்துயரமும்,
தேர்ந்தெனக் கேபிரமன் ஈந்தனன் நானும் உன்
சேவகம் புரிவ தெந்நாள்?
எனையாளும் அன்னையே! உனையன்றி இவ்வுலகில்
எவரென்னை அறிய வல்லார்!
இறைவிளனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே! 9

அடையா நெடுங்கதவும் அஞ்சேல் எனும்சொல்லும்
அமைகின்ற சந்நி தானம்!
அடியாரும் வானவர் அரம்பையர் முனிவரும்
அணைகின்ற சந்நி தானம்
பொடியேறு திருமேனிப் புனிதரும் நீயுமாய்ப்
பொலிகின்ற சந்நி தானம்!
போயெவர் கடைத்தலையும், ஈயென்று நில்லாத
புகழ்நல்கும் சந்நி தானம்!
முடவர்க்குக் மொழிகள் தந்து, குருடர்க்குக் கண்தந்து,
மூங்கைக்கும் மொழிகள் தந்து
மும்மைமலம் அறுவித்துச் செம்மைநலம் உணர்வித்து
முத்திதரும் சந்நி தானம்!
இடர்யாவும் போக்கும் எழிற்சந்நி தானம்நின்
இசைகொண்ட சந்நி தானம்!
இறைவிஎனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே! 10

மாரியாய் மேரியாய்,முகமது நபிக்கருள
வந்த ஒரு மாசக்தியாய்,
மனவாக் கிறந்ததிரு வருளாய் மதங்கள்தொறும்
வாழ்கின்ற தெய்வம் நீயே!!
ஓரிடம் ஒருகுணம் ஒருநிலை ஒருருவம்
ஒரு பெயர் ஒருவி கற்பம்
ஒன்றுமில்லாதபடி ஒவ்வொன்றும் தானாகி
உணர்வரிய பிரமம் நீயே!
ஆமென்றும் இல்லையென அறுதியுடன் வாதித்தும்
அடைவரிய எல்லை நீயே!
யாரென்ன சொன்னாலும் யான்உன்னை
ஒருநாளும் ஐயுற்ற தில்லை தாயே!
இறைவிஎனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே! 11

துயிலெழும் வேளையில், சுவைநீர் அருந்துகையில்
துறைநீர் படிந்தெ ழுகையில்,
தொழுகையில், பலபணியும் புரிகையில், இன்பமொடு
துன்பங்கள் எதிர்வ ருகையில்,
வயிறார உண்ணுகையில், மாதரார் தோட்புறம்
மனமுருகி உயிர்நோய் கையில்,
மக்கள்மெய் தீண்டுகையில், மாறாத காதலொடு
வண்டமிழ்ச் சுவைஆய் கையில்
அயலெவரும் அறியாமல் அன்னையுனை வழிபடும்
ஆசைமகன் நானில் லையா?
ஆசைமகன் தருகின்ற வாசமலர் மாலைகள்
அத்தனையும் தேனில்லையா?
இயலும்வரை பாடியும் எடுத்தளிக் காமல் நீ
இருப்பதொரு பழியில் லையா?
இறைவிஎனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே! 12

காற்றைப் படைத்தவன் நீயென்ற போதிலும்
கவரிகள் வீசு கின் றோம்!
கனலும் உன் வடிவெனிலும் கற்பூர தீபங்கள்
கமழ் தூபம் காட்டு கின்றோம்!
ஆற்றையும் கடலையும் அருளிய நின் மேனிக்கும்
அபிடேக நீர்சு மந்தோம்!
அங்கிங் கெனாதுவெளி எங்குமுள நீஉறைய
ஆங்காங்கு கோவில் செய்தோம்!
போற்றரிய நின்வடிவைப் பொன்னினும் கல்லிலும்
பூசித்து வாழ்த்து கின்றோம்!
புவிமீது நீதந்த பொருளன்றி வேறொன்றைப்
போய்த் தேடி எங்கு பெறுவோம்?
ஏற்றருள வேண்டும்என இதயத்தை எம் அன்பை
இணைமலர்த் தாளில் வைத்தோம்!
இறைவிஎனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே! 13

அன்பான நெஞ்சங்கள் அல்லலால் அழிவதும்
அன்னைநீ அறியாததோ?
அசடரும் கசடரும் அசத்தியப் பேயரும்
ஆட்சிபெற் றேவாழ்வதோ?
பொன்னான உலகத்தைப் போர்வெறி புலன்வெறி
புசித்திடவும் நீபார்ப்பதோ?
போகாத வழிபோய்ப் புலம்பிஅழும் மனிதகுலம்
பொலிவுபெற வழிஇல்லையோ?
தன்னலமும் வஞ்சகமும் தரணிமகள் உயிர்நிலை
தகர்த்தல்நீ சம்ம தித்தோ?
சங்கார நடமாடி வெங்கொடுமை சாய்க்க இது
சரியான பொழுதில்லையோ?
என்னவரும் ஆனாலும் உன்மவுனம் கலையா(து)
இருப்பதன் பொருள் என் னவோ?
இறைவிஎனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே! 14

மேனியும் ஆடையும் விழிகளும் சிவந்தபடி
வீரமா காளியே வா! மேவுபகை
யாவினையும் சாவுமகள் நாவில்
விருந்தாக்கும் சூலி யே வா!
தானென நினைந்துவரும் ஆணவம் தனையுண்டு
சதிராடும் மாரி யே வா!
தருமநெறி தவறாத பரதநிலம் காவலுற
சங்கார தேவி யே வா!
ஆனதினி ஆகட்டும் அறம்மட்டும் வாழட்டும்
ஆங்கார நீலி யே வா!
அமைதிவழி மூடுமெனில் அழிவுவழி திறந்துநீ
ஆதி மக மாயி யே வா!
ஈனமினி வெல்லா தெனப்பவி உணர்ந்திட
எழுந்துவா! விரைந்து வா! வா!
இறைவிஎனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே! 15

அல்லாதசெயல் புரியும் பொல்லாத மனிதர்கள்
அழியும் ஒரு காலம்வரும்!
அரக்கமனம் உடையவரின் ஆதிக்க வெறியாட்டம்
அடங்கஒரு நேரம்வரும்!
சொல்லாலும் நினைவாலும் துயர்செய்து திரிபவர்
துடித்துயிர் இழக்க நேரும்!
துறைதோறும் துறைதோறும் முறைநீங்கும் கயவர்க்குத்
தூக்குமரம் ஒன்று தோன்றும்
வெல்லாத சான்றோரின் வேதனைகள் தீரும்ஒரு
வெற்றிநாள் விரை வில்வரும்!
மேலோரும் நூலோரும் வீறோங்கி நமையாளும்
மெய்ஞ்ஞான உலகு தோன்றும்!
எல்லோரும் வாழ்வுபெறும் அந்நாள்என் தவமெலாம்
ஈடேறும் இனியநாளாம்!
இறைவிஎனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே! 16

என்னகவி பாடினால் உன்மனது மாறுமோ,
என் மீதும் கருணை வருமோ!
எவர்மூலம் அணுகினால்யான்செய்யும் விண்ணப்பம்
எளிதாக நிறைவேறுமா!
சொன்னபடி கேளாமல் துயர் செய்யும் என்மனம்
தூய்மைபெற வழியு முண்டோ?
சோதித்து வாட்டுவது போதுமென உன்னிடம்
சொல்லுபவர் யாரு மிலையோ?
சின்னமலர் என்றாலும் தேன்துளி சுமந்துதவம்
செய்துவரும் மலரல் லவோ!
செப்புவது பிழைபடினும் செவி இன்பம் தரவல்ல
சேய்மழலை மொழியல் லவோ?
இன்னபடி தான்பெற்ற பிள்ளைதுயர் எய்துகையில்
இளகாத தாயு முண்டோ?
இறைவிஎனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே! 17

ஆராய்ந்து சொல்தேடி ஆன்மாவின் தாபத்தை
அறிவிக்க முயலு கின்றேன்!
ஆனாலும் முழுமையும் அறிவிக்கும் திறனின்றி
அபலையாய்க் கதறு கின்றேன்!
சீர்தோறும் அடிதோறும் தேவிநின் திருவடிச்
சிலம்பொலி விரும்பு கின்றேன்!
தெய்வமே உன் குரலும் சேரும் எனும் ஆசையால்
செந்தமிழ் முழங்கு கின்றேன்!
வாராத துன்பங்கள் வந்தாலும் உனையன்றி
வைப்புநிதி வேறு காணேன்?
வாய்முத்தம் ஒன்றேனும் தாய்நீ வழங்காமல்
வருந்துதல் பொறுக்க மாட்டேன்!
யாரான போதும் அவர் இன்னலுற ஒப்பாத
எனைநீ மறுத்தல்தகுமா?
இறைவிஎனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே! 18

உயிரென்ற யாழிலே உந்தியும் ஊன்றியும்
ஊன்புகழ் மீட்டு கின்றேன்?
உள்ளமெனும் திரையிலே உணர்வெனும் கோலினால்
உன்வடிவு தீட்டு கின்றேன்!
செயிரற்ற அன்பையே தீபமாய் தூபமாய்த்
திருமுன்பு காட்டு கின்றேன்!
சிதறாத பார்வையொடு செய்ததமிழ் மாலையைத்
திருவடியில் சூட்டு கின்றேன்!
குயிலாக மாறிநான் கோயில்கள் தோறும் உனைக்
கூவிவர அருளுவாயா?
குளிர்தென்றலாகி நின் புகழ்பாடி உலகெங்கும்
கூத்தாட உதவு வாயா?
எயிலார் பெருந்துறைச் சிவயோக வல்லியே!
ஈசனார் மகிழும் மலரே!
இறைவிஎனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே! 19

தாய்கை பிடித்தபடி தளிர் நடை பயின் றுனது
சபையேறி வரவில்லையா?
தந்தையார் உபதேச மந்திரம் மொழிந்தபடி
சந்நிதியில் தொழவில்லையா!
வாய்திறந் தால் அங்கு வருவதுன் நாமம்என
வாழ்கின்ற மகனில்லையா?
மாதரார் போகத்தில் மயங்கிடும் காலத்தும்
மறவாத மனமில்லையா?
ஓய்வின்றி நான்பாட உவப்போடு நீ கேட்க
ஒப்பியதும் நினைவில்லையா?
ஓடோடிவந்தெனது தீராத துயர் தீர்க்க
உன்நெஞ்சில் கனிவில்லையா? ஈகின்ற
என் தலைவி நீ இல்லையா? உன்றன்
இசைவாணன் நானில்லையா?
இறைவிஎனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே! 20

உயிரினுக் குயிரான உனையன்றி வேறெவர்
உறவைநான் தேட முடியும்?
ஊனுருக உயிருருகஉனையன்றி யார் புகழை
உணர்வோடு பாட முடியும்?
மயிலாக நீயாடும் மனமேடை யதனில் நான்
மற்றெவரை ஏற்ற முடியும்?
வஞ்சமோ பகைமையோ வருத்திஎவ்வாறு நின்
மைந்தனை வீழ்த்த முடியும்?
இயலாகி இசையாகி எனையாலும் உனைநீங்கி
எவர் நிழலில் வாழ முடியும்?
என்றும்நின் திருவடியில் ஒன்றும்ஒரு மலராக
என்னை நீ சூட முடியும்?
எயிலாழி சூழ்குமரி அலைவாயில் உனைநாட
இன்னல்கள் யாவும் முடியும்!
இறைவிஎனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே! 21

நெற்றியில் நீ தந்த குங்குமம் இருக்கையில்
நெஞ்சினில் மயக்க மில்லை
நேரான சிந்தையொடு போராட வந்தபின்
நினைவினில் குழப்ப மில்லை
முற்றுமுனை நம்பியே முறையோடு மேற்கொள்ளும்
முயற்சியில் தயக்க மில்லை
மோகவய மாகிஉனைத் தாகமுடன் பாடிவரும்
முத்தமிழ் சலிப்ப தில்லை
உற்றவகை யாரெனிலும் உன்துணை கிடைத்தபின்
ஒய்வுற நினைப்ப தில்லை
உலகமோ ரேழுமே எதிராக நின்றாலும்
உண்மையை மறைப்பதில்லை
இற்றதினி அச்சம் இடர்கவலை நோய்பகைகள்
இன்னல்கள் இல்லை இல்லை
இறைவிஎனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே! 22

ஒளிநின்ற கோணங்கள் ஒன்பதும் மேவுபவள்
ஓங்கார நிலை ஆனவள்;
ஒன்றாய் அரும்பியவள்; பலவாய் விரிந்தவள்;
உணர்வினுக்(கு) அமுதானவள்;
அளிநின்ற சிந்தையில் அருவியாய்ச் சொரிபவள்;
அழலின் பிழம்பணிபவள்
அண்டபகி ரண்டம் அனைத்தையும் செண்டாய்
அடித்துவிளை யாடவல்லள்!
புளிநின்ற செம்பிலும் ஊளிநின்ற கல்லிலும்
பொருத்தியதும் என்ன விந்தை?
புயலாய்க் கிளர்ந்தெழு புரட்சிமகள் அமைதிஎழில்
போர்த்துற்ற தென்ன செய்கை?
எளிவந்து புதுகைநகர் குடிகொண்ட இளவஞ்சி,
எமையாளும் புவனேச்வரி!
இறைவிஎனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே! 23

ஓமெனும் மந்திரத் துட்பொருள் ஆகின்ற
ஸ்ரீராச ராசேச்வரி
ஊழிதொறும் உயர் அறம் காக்கின்ற
ஸ்ரீராச ராசேச்வரி
நாமமும் உருவமும் பலவாகி உலகாளும்
ஸ்ரீ ராசரா சேச்வரி
ஞானமும் இச்சையும் கிரியையும் தானான
ஸ்ரீ ராசரா சேச்வரி
சேமமும் இன்பமும் சித்தியும் உதவிடும்
ஸ்ரீ ராசரா சேச்வரி
ஸ்ரீசக்ர நிலையத்தில் சிவசக்தி வடிவான
ஸ்ரீ ராசரா சேச்வரி
யாமும்எம் கல்வியும் யாவும்உன் அடைக்கலம்
ஸ்ரீ ராசரா சேச்வரி
இறைவினை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே! 24

மண்ணவரும் விண்ணவரும் மற்றெவரும் சொல்லரிய
மரகதத் தாள்கள் வாழ்க!
மனத்துயர் அகற்றியாம் நினைத்தது நினைத்தபடி
வழங்கிடும் கைகள் வாழ்க!
தண்ணளி சுரந்தொளிரும் தாமரைக் கண்களோடு
தமிழ்தேறும் செவிகள் வாழ்க!
சமர்வேட்ட அவுணரின் மறம்வாட்டி வீழ்த்திய
தடம்பணைத் தோள்கள் வாழ்க!
பண்ணிலகு தீஞ்சொல் பசுந்தமிழ் நுகர்ந்தருளும்
பரிவுமிகு சிந்தை வாழ்க!
பாரகம் அடங்கலும் பாலிக்கும் செங்கோலும்
படைமுரசு குடையும் வாழ்க!
எண்ணரிய புகழ்கொண்ட பெண்ணரசு நின்கொற்றம்
இசைகொண்டு வாழ்க!வாழ்க!
இறைவினை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே! 25

## வாழ்த்து

பொலிகஇவ் வையகம்! பொலிகநெடு வானகம்!
போயொழிக துயர மெல்லாம்!
புதியசொல் புதியபொருள் புதிய சுவை புதிய இசை
புலரட்டும் உலக மெல்லாம்!
மலிகவளம்! வளர்கநலம் வாழ்கவே நல்லறம்
மயக்கங்கள் யாவும் தீர்க!
மங்கல மடந்தையர் மனையறம் நனிதழைக!
மடமைகள் வீழ்க! வீழ்க!
கலிகெடுக! எங்கெங்கும் கருணை அர சோச்சுக
கயமைகள் நிலம்பு தைக!
கலைமகள் விளக்கமாய்த் திருமகள் பெருக்கமாய்க்
காலங்கள் அமுதா குக!
இலம்பா(டு)ஒன் றில்லாமல் யாவர்க்கும் யாவும் இனி
எய்தநீ ஆணை தருக!
இறைவிஎனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே! 26

## வரம்

தேவாதி தேவிநின் தெய்வமாகக் கருணையால்
தீராத நோய்கள் தீரும்;
செல்வமும் செல்வாக்கும் செருமுனையில் வெற்றியும்
சீர்நிலை பேறும் சேரும்;
பூவுலகில் நிலையான புகழ்பெருகும்; அறிவில்ஒரு
புதியஒளி தான்பி றக்கும்;
பூண்ஆள் இடம்துணை புத்திரர் பசுக்கள்எனும்
பொலிவுவரும்; உயிர்த ழைக்கும்;
பாவங்கள் ஏழ்மைகள் பழவினைகள் எனும் இவைகள்
பனிபோல் அகன்று நீங்கும்;
பத்தியொடு சொல்வார்க்குச் சித்திகள் கைகூடும்;
பாரின்மிசை அமைதி ஓங்கும்;
யாவும் கடந்தபே ரின்பநிலை கிட்டும்என
இசைபாடி வாழ்த்து கின்றோம்!
இறைவிஎனை ஆண்டருளும் இராசரா சேச்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே! 27

உ

ஓம் கணபதி துணை

# ஸ்ரீ கணபதி காப்பு

நெஞ்சக் கனகல்லு நெகிழ்ந் துருகத்
தஞ்சத் தருள்சண் முகனுக்(கு) இயல்சேர்
செஞ்சொல் புனைமாலை சிறந்திடவே
பஞ்சக் கரஆனை பதம் பணிவாம்

## மழைவேண்டல் பிரார்த்தனை

மல்குக வேத வேள்வி வழங்குக சுரந்து வானம்
பல்குக வளங்கள் எங்கும் பரவுக அறங்கள் இன்பம்
நல்குக உயிர்கட்கு எல்லாம் நான்மறைச் சைவம்
ஓங்கிப்
பல்குக உலகம் எல்லாம் புரவலன் செங்கோல் வாழ்க.

ஸ்ரீ ஜகத்குரு

## ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ திருச்சி மஹாஸ்வாமிகள்

# போற்றி அகவல்

| | | | |
|---|---|---|---|
| அன்பனடி | போற்றி | அனந்தனடி | போற்றி |
| அருளுருவே | போற்றி | மாமணியே | போற்றி |
| மாசில்லா | நேசனின் | மங்காவடி | போற்றி |
| மாயப் | பிறப்பறுக்கும் | நிமலனடி | போற்றி |
| சிந்தனைக்குச் | சீர்தரும் | செல்வனடி | போற்றி |
| வாக்கு | வளமுள்ள | வள்ளலடி | போற்றி |
| கருணைக்கு | வழிகாட்டும் | காந்தனடி | போற்றி |
| சொல்லாலே | சோர்வகற்றும் | சுகந்தனடி | போற்றி |
| மாறாத | இன்பம் | அருளுமடி | போற்றி |
| தேவியைக் | காட்டும் | தியாகரடி | போற்றி |
| புகழ்மாலை | வேண்டாத | புண்ணியனடி | போற்றி. |
| மலர்மாலை | அணிவித்த | மாதேவனடி | போற்றி |
| பழமைக்குப் | பண்புரைத்த | பாங்கனடி | போற்றி |
| காலத்தை | வென்ற | காலனடி | போற்றி |
| ஒன்றே | எனக்கண்ட | ஓம்காரனடி | போற்றி |
| எல்லாம் | எனக்கொண்ட | ஏகனடி | போற்றி |
| விண்ணோர் | போற்றும் | வீரனடி | போற்றி |

| | | | |
|---|---|---|---|
| மண்ணோர் | வணங்கும் | மறையோனடி | போற்றி |
| ஒளியாய் | நின்ற | உத்தமனடி | போற்றி |
| காமத்தைக் | களைந்த | காராளனடி | போற்றி |
| ஏழைக் | கிரங்கும் | எம்மானடி | போற்றி |
| உலகம் | நிலைக்க | ஒருவராய் | வந்துதித்த |
| திருச்சி | சுவாமிகளின் | பூங்கழல் | போற்றி |
| | | | போற்றியே. |

**வேண்டும் ஸ்ரீ சற்குருவே துணை**
**ஹரி ஓம் நன்றாக குரு வாழ்க**
**குருவே துணை**

**சரணம் சரணம் ஸ்ரீ சற்குருவே சரணம்**
**சரணம் சரணம் சக்தி சரணம்**

# ஸ்ரீ ராஜராஜேஸ்வரி அஷ்டகம்

அம்பா சாம்பவி சந்திரமௌளி ரமலா
அபர்ணா உமா பார்வதீ!
காளீ ஹைமவதீ சிவா த்ரிநயனா
காத்யாயனீ பைரவீ!

சாவித்ரீ நவயௌவனா சுபகரீ
சாம்ராஜ்ய வக்ஷ்மீ ப்ரதா!
சித்ரூபா பரதேவதா பகவதீ
ஸ்ரீ ராஜராஜேஸ்வரீ!! 1

**பொழிப்புரை:-**

ஹே,அம்பிகே,சாம்பவி எல்லா உலகங்களுக்கும் அன்னையும், சந்திரனைச் சிரசில் உடையவளும், மெல்லிய சரீரமுடையவளும், தவஞ் செய்யும் போது இலையைக்கூட புசியாதவளும், மலைமகளும், காளியும், ஹிமவானின் புத்திரியும், மங்களமுள்ளவளும், மூன்று கண்களையுடைய வளும், காத்யாயனரின் புத்திரியும், பைரவரின் மனைவியும், உலகங்களை படைப்பவளும், புதியயௌவனமுள்ளவளும், க்ஷேமத்தை செய்பவளும், ஸாம்ராஜ்யலக்ஷ்மியைக் கொடுப்பவளும், ஞான ஸ்வரூ பணியும் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரியுமானவர்கள் தாங்கள்.

அம்பா மோஹினி தேவதா த்ரிபுவனீ
ஹ்றயானந்த ஸந்தாயினீ வாணீ
பல்லவபாணி வேணுமுரளீ
கானப்பிரியா லோலினீ!!

கல்யாணீ ஹ்றயுடுராஜ பிம்பவதனா
தூம்ராக்ஷ ஸம்ஹாரிணீ
சித்ருபா பரதேவதா பகவதீ
ஸ்ரீ ராஜராஜேஸ்வரீ!! 2

பொழிப்புரை:-

(உலகிற்கு) மயக்கந்தரும் அழகுடையவளே! அன்னையும், பிரகாசமுடையவளும், மூன்று உலகங் களுக்கும் காரணமானவளும், ஆனந்தத்தை கொடுப்பவளும், வாக்ருபிணியும், தளிர்போன்ற கரத்திலே ஏந்திய புல்லாங்குழலால் உண்டாகும் இனிய ஓசையிலுள்ள பிரியத்தால் சரீரத்தை அசைப்பவளும், மங்களருபிணியும், சந்திர பிம்பம் போன்ற முகமுள்ளவளும், தூம்ராக்ஷன் என்ற அசுரனை ஸம்ஹரித்தவளும், ஞானருபிணியும் மேலான தெய்வமும், மஹிமையுள்ளவளும், ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரீயுமானவர்கள் தாங்கள்.

அம்பா நூபுரரத்ன கங்கணதரீ
கேயூர ஹாராவலீ!
ஜாதீசம்பக வைஜயந்தி லஹரீ
க்ரைவேயகை ராஜிதா!!

வீணா வேணுவினோத மண்டிதகரா
வீராஸனே ஸம்ஸ்திதா
சித்ரூபா பரதேவதா பகவதீ
ஸ்ரீராஜராஜேஸ்வரீ!! 3

பொழிப்புரை:-

எல்லா உலகங்களுக்கும் அன்னையும், பாதஸரம் ரத்தினமிழைத்த கங்கணம் தரித்தவளும், தோளணி, முத்துமாலைகளின் வரிசை, ஜாதிப்பூ, செண்பகப்பூ இவைகளால் நன்கு பிரகாசிப்பவளும், வீணை, புல்லாங்குழல் இவைகளை வாசிக்கின்ற அழகு வாய்ந்த கைகளையுடையவளும், வீரா ஸனத்திலே நன்கு அமர்ந்திருப்பவளும், ஞான ரூபிணியும், மேலான தெய்வமும், மஹிமையுள்ளவளும், ஸ்ரீ ராஜராஜேஸ்வரீயுமானவர்கள் தாங்கள்.

அம்பா ரௌத்ரிணி பத்ரகாளி
பகலா ஜ்வலாமுகீ வைஷ்ணவீ!
ப்ரஹ்மாணீ த்ரிபுராந்தகீ ஸுரநுதா
தேதீப்ய மானோஜ்வலா!!

சாமுண்டாஸ்ரித ரக்ஷபோஷ ஜனனீ
தாக்ஷாயணீ வல்லபா!
சித்ரூபா பரதேவதா பகவதீ
ஸ்ரீராஜராஜேஸ்வரீ!! 4

**பொழிப்புரை:-**

பயங்கர ரூபமுள்ளவளே! மங்களத்தைத்தரும் நீலநிறமுள்ளதேவியே! அன்னையும் ஜ்வாலையைக்கக்கும் முகமுள்ளவளும், விஷ்ணுவின் சக்திரூப மானவளும், பிரம்மாவின் சக்திரூபமானவளும், த்ரிபுராஹுரர்களை ஸ்ம்ஹரித்த சிவனின் சக்தி ஸ்வரூபமானவளும் தேவர்களால் துதிக்கப் பெற்றவளும், மிகுந்த காந்தியுடையவளும் சண்டன், முண்டன் என்ற அசுரர்களை ஜயித்தவளும், அண்மனவரை காப்பாற்றி வளர்க்கும் தாயும், தக்ஷனுடைய பெண்ணும், கோபிகையும், ஞானரூபிணியும், மேலான தெய்வமும் மஹிமையுள்ளவளும், ஸ்ரீ ராஜராஜேஸ்வரீயுமானவர்கள் தாங்கள்.

அம்பா சூலதனு: கசாங்கு சதரீ
ஹ்யர்த்தேந்து பிம்பாதரீ!
வாராஹீ மதுகைடப ப்ரசமனீ
வாணீ ரமா ஸேவிதா!!

மல்லாத்யா சுர மூகதைத்ய மதனீ
மாஹேஸ்வரி சாம்பிகா
சித்ருபா பரதேவதா பகவதீ
ஸ்ரீராஜராஜேஸ்வரீ!! 5

பொழிப்புரை:-

அன்னையும்,சூலம், வில், பாசம், அங்குசம் தரித்தவளும், சந்திரபிம்பத்தின் பாதியைத் தரித்தவளும், வராஹாவதாரம் செய்த விஷ்ணுவின் சக்தி ரூபமானவளும், மது, கைடபன் என்ற அசுரர்களை அடக்கியவளும், ஸரஸ்வதியாலும் லக்ஷ்மியாலும் ஸேவிக்கப்பட்டவளும், மல்லர், மூகன் என்ற அசுரர்களை அழித்தவளும், மஹேஸ்வரரின் மனைவியும்,(எல்லோரிடமும் தயையுள்ளவளும்) தாயும், ஞானரூபிணியும் தெய்வமும் மஹிமையுள்ளவளும், ஸ்ரீ ராஜராஜேஸ்வரீயுமானவர்கள் தாங்கள்.

அம்பா ஸ்ருஷ்டி வினாசபாலனகரீ
சார்ய விசம் சோபிதா! காயத்ரீ
ப்ரணவாக்ஷர ம்ருதரஸ:
பூர்ணானு ஸந்தீ க்ருதா!

ஓங்காரீ விநதா ஸுதார்சிதபதா
சோத்தண்ட தைத்யா பஹா
சித்ரூபா பரதேவதா பகவதீ
ஸ்ரீராஜராஜேஸ்வரீ!!

பொழிப்புரை:-

அன்னையும், படைத்தல் அழித்தல் ரக்ஷித்தல் இவைகளைச் செய்பவளும், பூஜிக்கத் தகுந்தவளும், பிரகாசிப்பவளும் காயத்ரீ மந்திர ரூபமானவளும், ப்ரணவாக்ஷரத்தில் மூழ்கியவளும், இடைவிடாது தியானிக்கப்படுபவளும், ஓங்காரரூபிணியும், வினதையின் புத்திரனான கருடனாலே பூஜிக்கப்பட்ட பாதங்களையுடையவளும், ஞானரூபிணியும், மேலான தெய்வமும், மஹிமையுள்ளவளும் ஸ்ரீ ராஜராஜேஸ்வரியுமானவர்கள் தாங்கள்.

அம்பா சரஸ்வதி வினுதா
ஹ்யார்யா மஹா தேவதா
யாப்ரஹ்மாதி பிபீலிகாந்த ஜனனீ
யாவை ஜகன் மோஹிநீ!!

யா பஞ்ச ப்ரணவாதிரேப ஜனனீ
யாசித்கலா மாலிநீ
சித்ரூபா பரதேவதா பகவதீ
ஸ்ரீராஜராஜேஸ்வரீ!!

பொழிப்புரை:-

அழிவற்றவளே! அன்னையும், வேதமும் முதலியவற்றால் துதிக்கப்பட்டவளும், பூஜிக்கப்பட்டவளும், பெருந் தெய்வமுமான, எந்த நீங்கள் பிரம்மா முதல் எறும்பு ஈறாக உள்ளவைகளைப் படைத்தவர்களோ, எந்த நீங்கள் உலகங்களை மோஹக்கச் செய்பவர்களோ, எந்த நீங்கள் ஐந்து விதமான பிரணவம் முதலிய ஒலிகளை அருளிச் செய்த்வர்களோ, எந்த நீங்கள் உயிர்களிடத்தில் அறிவுக்கறிவாய் இருக்கிறீர்களோ.அப்படிப்பட்ட நீங்கள் ஞானரூபிணியும், மேலான தெய்வமும், ஸ்ரீராஜ ராஜேஸ்வரியுமாய் விளங்குகின்றீர்கள்.

அம்பா பாலித பக்தராஜ ரசிதம்!
அம்பாஷ்டகம் ய: படேத்!
அம்பா லோலகடாக்ஷ வீக்ஷீலலிதம்!
சைஸ்வர்ய மவ்யாஹதம்!!

அம்பா பாவன மந்த்ர ராஜபடனா
தந்தே சமோக்ஷப்ரதா
சித்ரூபா பரதேவதா பகவதீ
ஸ்ரீராஜராஜேஸ்வரீ!!

பொழிப்புரை:-

எவர் அன்னையால் காப்பாற்றப்பட்ட அம்பாஷ்டகத்தை படிக்கிறாரோ, அவர் அன்னையின் கடைக்கண் பார்வைக்கு இலக்காகி ஐஸ்வரியத்தை அடைவார். பரிசுத்தமானதும் சிறந்ததுமான இந்த மந்திர ஸ்துதியைப் படித்தால் ஞானரூபிணியும், மேலான தெய்வமும், மஹிமையுள்ளவளும், ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரியுமான அன்னை, ஸாயுஜ்யத்தையும் பெறும்படி செய்கிறாள்.

ஸ்ரீ ராஜராஜேஸ்வரீ அஷ்டகம்-முற்றிற்று.

# பூஜை

நினைக்கும் தன்மையுடையவன் மனிதன். நினைவை வெளிப்படுத்துங் கருவி வாய்; உணவுகளை அருந்துகின்ற வாய்க்குப் பெருமை கிடையாது. வாயிருந்தும் விலங்குகளை வாயில்லாத பிராணிகள் என்று கூறுகின்றோம். கருத்துக்களை வெளிப்படுத்தி வசனிக்கும் வாயை உடையவன் மனிதன்.

இந்த உடம்பும் வாக்கும் நமக்குத் தந்தவன் இறைவன் இவைகள் தாமே வந்து அமைவதில்லை நாமேயும் எடுத்துக் கொள்வதில்லை.

"வாழ்த்த வாயும் நினைக்க மட நெஞ்சும்
தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவன்"

என்கின்றார் அப்பர்.

எனவே, நினைக்க நெஞ்சையும், வசனிக்க வாயையும், இந்த இரண்டையும் தாங்கி நின்று தொழிற்படுகின்ற உடம்பையும் தந்த

இறைவனை நாம் ஒவ்வொருவரும் நன்றி மறவாமையின் பொருட்டுப் பூவும் நீரும் கொண்டு பூஜை செய்யவேண்டும்.

பூ-பூர்த்தி ஜா-உண்டாக்குவது, மலமாய கன்மங்களைப் பூர்த்தி செய்து, சிவஞானத்தையுண்டாக்கும் புனிதமான செயல் பூஜா எனப்படும். பூஜா என்ற சொல் பூஜை என வந்தது.

பூஜைக்கு முக்கியமான சாதனங்கள் பூவும் நீருமாகும்.

"புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணலு மதுகண்டு அருள் செய்யாதிற்கும்"

நல்ல மலர்களைக் கொண்டு இறைவனை நாள்தோறும் அர்ச்சனை செய்யவேண்டும் அதுவே மெய்யும் கையும் பெற்றதற்குப் பயனாகும்.

உலகில் செல்வமும் சீரும் படைத்துச் சிறப்பாக வாழ்கின்ற ஒருவனைக் கண்டபோது "இவர் முற்பிறப்பில் நல்ல பூவெடுத்துப் பூஜை செய்தவர்" என்று இன்றும் கூறுவார்கள்.

நண்டு பூசித்தது; சிலந்தி பூசித்தது; பாம்பு பூசித்தது; குரங்கு பூசித்தது;அணில் பூசித்தது; காகம் பூசித்தது; (குரங்கணிமுட்டம்)

பெரிய உருவமுள்ளது யானை; சிறிய உருவமுள்ளது எறும்பு. எறும்பு முதல் யானையீறாக என்று கூறுவர். திருச்சிராப்பள்ளிக்கு அருகில் உள்ள திருஎறும்பூர் எறும்பு பூசித்த திருத்தலம். யானை பூசித்த திருத்தலம் திருவானைக்கா.

எறும்பும் யானையும் பூசித்த இந்தத் தலங்களைக் கண்கூடாகக் கண்டும் மனிதர்கள் இறைவனைப் பூசிக்காமல் உண்டு உடுத்து உலாவி வீணே காலங் கழித்து காலன் வாய்ப்படுகின்றனர்.

## ஸ்ரீராஜராஜேஸ்வரி துணை

ஓடிவருவாய் அம்மா ஓடிவருவாய்-உன்னைத்
தேடிவரும் பக்தர்மனம் நாடி வருவாய்

ஆடிவருவாய் அம்மா அசைந்துவருவாய்-அந்த
அம்பலக் கூத்தாடியுடன் கூடிவருவாய் ஓடிவருவாய்

காலினில் சலங்கைகொஞ்ச ஆடிவருவாய்-அந்த
கனகசபை நாதன்புகழ் பாடிவருவாய் ஓடி

ஏங்கி நிற்கும் ஏழையெனைப் பார்க்கவருவாய்-அம்மா
என்னுடைய குறைகளெல்லாம் தீர்க்கவருவாய் ஓடி

கருவறையை விட்டுநீ வெளியில்வருவாய்-இங்கு
கண் கலங்கி நிற்பவரைக் காக்கவருவாய் ஓடி

சிரித்துவருவாய் நான், சிரிக்கவருவாய் -நீ
சித்து விளையாடி நலம் அளிக்கவருவாய் ஓடி

அருள்தருவாய் அம்மா பொருள்தருவாய்-உன்
அடிமை எனக்கு உந்தன் நிழல்தருவாய் ஓடி

லெ.சோமு

## சுத்த சக்தி எழுச்சி

**இராகம்: பூபாளம்** **தாளம்:திரிபுடை**

எழுந்திரு கல்யாணி ஓம் சுத்த சக்தி எம்
இதயத்தில் உபசாந்த உதயத்தைத் தூண்டி
அழுந்திருள் ஒழிந்திடச் செழுஞ்சுடர் பொழிந்தெங்கள்
ஆதார கமலத்தின் மீதேறிப் பொழிந்திட
எழுந்திரு ஓம் வாணி, எழுந்திரு ஓம் லக்ஷ்மி,
எழுந்திரு ஓம் சக்தி, குண்டலிக் கனலே,
எழுந்திரு சாந்த மஹேஸ்வரி தாயே, இதய
மனோன்மணி உதய சுந்தரியே!
ஆர்வமெனும் சேவல் கூவுதுன்னருளை
அன்புளம் பாடுதுன் ஆடலின் பொருளைக்
கார்வரக் காணும் கலாபத்தைப் போலுன்
கருணை முகங்கண்டு களித்ததெங் கண்ணே!
சூரிய ஜோதிசேர் தாரகை போலுன்
சுடரினில், ஒன்றாகும் சுகநிலை யருளாய்
பாரெலாம் உன்முகம் பார்த்திட வருளாய்
பரமசிவானந்தம் பாலிக்குற் திருவே!
விண்முகம் கனிந்தது விடிந்தது காலை
வீங்கிருள் அகன்றது தூங்கின குமுதம்
தண்முகம் அருணத் தணல் முகமானது
தடங்களில் விரந்தன தாமரை யெல்லாம்
மண்முகம் புதுப்பசும் பொன்முக மாகிட
மங்கலச் செங்கதிர் மலர்ந்தது வானில்
எம்முகம் பார்த்தருள் புரிவதற்கெண்ணி
எழுந்தருள் இத்தினம் இன்பக் கொழுந்தே!
புள்ளினம் வண்டினம் பூமணத் தென்றல்
பூபாளம் பாடியே போற்றின உன்னைத்
துள்ளின கன்றினம் தாய்மடி உண்டே
தொண்டருன் பெருமையைத் துதித்தனர் கூடி
வினைம் ஆனந்த தேன் அமுதாறே
வேகமாய் வந்துஆன்மத் தாதந்தீர்த்தருளாய்,
உள்ளொளி தூண்டி எம் உண்மையை யிலக்காய்
ஓம் சுத்த பரமாத்ம சக்தியே வணக்கம்!

உ

## ஸ்ரீ ராஜராஜேஸ்வரி துணை

காற்றைப் படைத்தவள் நீயென்ற போதிலும்
கவரிகள் வீசுகின்றோம்
கனலும் உன்வடிவெனினும் கற்பூர தீபங்கள்
கமழ்தூபம் காட்டுகின்றோம்

ஆற்றையும் கடலையும் அருளிய நின்மேனிக்கு
அபிஷேக நீர்சுமந்தோம்
அங்கிங்கெனாதபடி எங்குமுள நீஉறைய
ஆங்காங்கு கோயில் செய்தோம்

போற்றரிய நின்வடிவைப் பொன்னிலும் கல்லிலும்
பூசித்து வாழ்த்துகின்றோம்
புவிமீது நீதந்த பொருளன்றி வேறொன்றை
போய்தேடி எங்கு பெறுவோம்

ஏற்றருள வேண்டுமென இதயத்தை எம்அன்பை
இணைமலர் தாளில் வைத்தோம்
இறைவி யெனை ஆண்டருளும் ராஜராஜேஸ்வரி
கருநாடகத்திலுறை ஞானாக்ஷியே!!

# ஸ்ரீ ராஜராஜேஸ்வரி துணை

அன்புமனம் கொண்டவளே ஆதிசக்தி ஞானாக்ஷி
இன்பமுடன் வாழ்வுதந்து எங்கள்குலம் காத்திடுவாய்.
ஒன்பதுநாள் பூஜைசெய்தோம் உன்புகழைப் பாடிநின்றோம்
ஓங்கார நாயகியே உன்னருளைத் தந்திடுவாய் அன்பு
சத்குருவின் உருவினிலே சத்தியத்தைக் காப்பவளே
சங்கரியே எங்களுக்கு சந்ததியைத் தந்திடுவாய் அன்பு
கும்பமதில் உன்னைவைத்தோம் குங்குமத்தில் பூஜை செய்தோம்
கோலவிழி ஞானாக்ஷி குலம்காக்க வந்திடுவாய் அன்பு
சிங்காரக் கோயிலிலே கொலுவிருக்கும் பொன்மகளே
சிந்தூர நாயகியேஎன் சிந்தையிலே நீயிருப்பாய் அன்பு
மலராலே மாலையிட்டோம் மனம்போலே பூஜையிட்டோம்
மணம் வேண்டும் பெண்களுக்கு மாங்கல்யம் தந்திடுவாய் அன்பு
அம்மா தாயே ஞானாக்ஷி
ஆதிபராசக்தி உமையவளே
அன்னை உந்தன் அடிபணிந்தோம்
அன்புடன் எங்களைக் காப்பாற்று.
மஞ்சள்பூசி நீராடி யிளம்
மங்கையர் உன்னை வலம்வருவார்
இல்லறத் துணைவன் வேண்டுமென்று
இருகரம் கூப்பி வழிபடுவார் அம்மாதாயே
மங்கலம் தந்து மனைதந்து அவர்
மனம்போல் வாழ்வு நீதருவாய்
கட்டியதாலி நிலைபெறவே அவர்
காலம் முழுவதும் துணையிருப்பாய். அம்மாதாயே

லெ.சோமு

## ஸ்ரீலஸ்ரீ திருச்சி சுவாமிகள் புகழ்மாலை

அம்பிகையின் திருவுருவாய் அவதரித்த அருட்சுடரே
அண்டிவரும் பக்தருக்கு அருள்வழங்கும் வாரிதியே
மதங்கொண்ட களிறதனை மண்டியிடச் செய்வதரே
மன்னர் பரம்பரையில் வந்துதித்த மாமணியே
துன்பமென்று வந்தவர்க்குத் துணைபுரியும் தூமணியே
வறுமையென்று வந்தவர்க்கு வாழ்வு தரும் நாயகனே
செந்தூரப் பொட்டிட்டுச் சிரித்திருக்கும் சின்மயமே
இந்துமதக் கருத்தை எடுத்துரைக்கும் பெருமானே
ஆதியிலே அவதரித்த அன்புகொண்ட சங்கரர்போல்
ஜோதியிலே கலந்துவிட்ட ராமலிங்க வள்ளலைப்
போல்
சின்ன வயதினிலே சித்திபெற்று வந்தவரே
முன்னறியும் சக்திகொண்ட முனிவர் பெருமானே
ஓயாது உறங்காது உலகத்தைச் சுற்றிவரும்
ஒளிமிகுந்த சந்திரனை உம்மிடத்தில் காண்கின்றேன்
இருள்நீங்கி ஒளிவிளங்க ஏற்றிவைக்கும் தீபம்போல்
திருவிளங்கும் உம்முகத்தில் தீபஒளி காண்கின்றேன்
சின்னஞ் சிறுவயதில் சிங்களத்தைச் சுற்றிவந்தும்
செட்டிமக்கள் நாட்டினிலே சிலகாலம் அருள்புரிந்தும்
கங்கைநதி கடந்து கயிலாஸம் கண்டுவந்து
கர்நாடகத்தினிலே கயிலாஸ மடம் நிறுவி

பச்சையிளம் பாலருக்கு பள்ளிகள் கட்டிவைத்து
அருள்வழங்கும் ஞானாக்ஷி ஆலயமும் ஏற்படுத்தி
முறையோடு பூஜைகளும் முக்கால தெரிசனமும்
அமர்ந்திருந்து அருள்வழங்கும் அழகான ஆசனமும்
ஜாதிமத பேதமின்றி சமபந்தி போஜனமும்
காணவரும் பக்தருக்கு களிப்பைத் தருவதுண்டு
அழுகின்ற குழவியினை அன்போடு அணைத்திட்டு
உச்சி முகந்து ஒருநூறு முத்தமிட்டு
பால்புகட்டித் தாலாட்டும் பண்புடைய தாயனையை
உம்மிடத்து வந்தவர்கள் ஒருநொடியில் காண்பார்கள்
உம்பார்வை பட்ட இடம் உயர்வடையக் காண்கின்றேன்
பாதம் பட்ட இடம் பால்பொங்கப் பார்க்கின்றேன்
சமயத்தைக் காக்கின்ற சக்திகொண்ட சற்குருவே
சத்தியமே உம்மலர்த்தாள் சரணம் சரணமய்யா.

லெ. சோமு

## ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி துணை.

பூவாலே மாலையிட்டுப் பொன்னடியில் தெண்டனிட்டேன்
பாமாலை பாடி உந்தன் பாத மலர் நான் தொழுதேன்

ஆதி முதலானவளே ஆனந்த பைரவியே
சோதி வடிவானவளே சுந்தரியே ஞானாக்ஷி

வேதியரின் வேள்வியிலே விருப்பமிகக் கொண்டவளே
வேத முதல் நாயகியே வேண்டும்வரம் தந்திடுவாய்

செய்த தவறையெல்லாம் சீர்தூக்கிப் பாராமல்
கைகொடுத்துக் காப்பாற்ற கணப்பொழுதில் வந்திடுவாய்

பேய் பில்லி சூன்யமெல்லாம் பிள்ளை எனைச் சேராமல்
தாய் போல் துணையிருந்து தடுத்தாள வந்திடுவாய்

காலன் வரும் போது என்னைக் காப்பாற்ற யாருமில்லை
கோடி செல்வம் வந்தாலும் கொண்டு செல்வ தொன்றுமில்லை

மாடு மனை மக்களொடு மகிழ்ச்சியுடன் வாழ்ந்தாலும்
மனதில் அமைதி பெற மாதா உன் அருள் வேண்டும்

நீடாழி சூழுலகில் நீதி முறை நேர்மையில்லை
நீதி முறை நேர்மை பெற நின்னருளைத் தந்திடுவாய்

லெ. சோமு

## ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி துணை.

சரணம் சரணம் சரணம் அம்மா - எங்கள்
ஞானாக்ஷி தேவியே சரணம் அம்மா

கர்நாடகத்தின் தென்திசையில்
காஞ்சனபுரியென்னும் திருத்தலத்தில்
கண்ணே உனக்கொரு ஆலயமாம்
கண் கவர் அழகிய மண்டபமாம்

(சரணம்)

மண்டபத்தில் நீ கொலுவிருக்க
மக்கள் எல்லாம் உனை வணங்கி நிற்க
மகிழ்வுடன் நீயும் அருள்புரிவாய்
மனம் போல் வாழ்வு தந்திடுவாய்

(சரணம்)

சத்தியத்தாய் நீ மேடையிலே
சத்குரு நாதன் உன்னருகினிலே
பார்த்திடப் பார்த்திடப் பரவசமே
பக்தர்களெல்லாம் உன் வசமே.

(சரணம்)

வேதத்தின் ஒலி எங்கும் நிறைந்திடவே
வேதியர் வேள்வியை நடத்திடவே
வேதிகை மீதில் வந்தமர்ந்து
வேண்டிய வரங்களைத் தந்திடுவாய்

(சரணம்)

நாவலர் உன்புகழ் பாடிடவே
நாதஸ்வர இசை முழங்கிடவே
நவராத்திரியில் உனைத்தொழுவோம்
நலங்களெல்லாம் நீ தந்திடுவாய்

(சரணம்)

லெ. சோமு

## ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி துணை.

கருநாடகத்திலுறை
தாயே தயாநிதியே
எல்லோர்க்கும் வாழ்வளிக்கும்
ஞானாக்ஷி ஈஸ்வரியே

கருவிலுருவாக்கி என்னைக்
கண்போன்று காப்பவளே
என்னருமைத் தாய்உனக்கு
என்ன கவி பாடிடுவேன்

ஆடைகொண்ட என்மனது
அலைகடல்போல் ஆடுதம்மா
ஆதரவு ஏதுமின்றி
வேதனையில் வாடுதம்மா

உள்ளமெனும் கோயிலிலே
உன்னைவைத்துப் பூஜைசெய்வேன்
ஆடை தந்த நாயகியே
ஓடிவந்து அருள்புரிவாய்

மறுமுறையும் நான்பிறந்தால்
உன்மலரடியை தொழவேண்டும்
மாதா உன் வாசலுக்கு
மறவாமல் வரவேண்டும்

எங்கள்குல தெய்வம் உன்னை
ஏற்றிமிகப் பணிந்திடுவேன்
என்னாளும் துணையிருந்து
எங்களுக்கு வாழ்வளிப்பாய்.

லெ. சோமு

## ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி துணை

உன்கோவில் வலம் வந்து அருள் வேண்டினேன்
உன் பாதம் தலை வைத்துப் பொருள் வேண்டினேன்

என்தாயே நீ இன்னும் இறங்கவில்லையே.
என்னுடைய தேகத்தில் வலுவில்லையே.

உறவென்றும் பகையென்றும் எனக்கில்லையே.
உன்பாதம் அன்றி ஒரு நிழல் இல்லையே
ஆதரவில்லாத என்னைக் காப்பாற்றுவாய்
அன்போடு எனைவந்து ஆட்கொள்ளுவாய்

பொருளாலே குறை வைத்தால் பொறுப்பேனம்மா.
மனதினிலே குறை வைத்தால் மறப்பேனம்மா
உடல்தனிலே குறைவைத்தால் உடல்தாங்குமா
உமையவளே இது உனக்கு முறையாகுமா.

நிலையான மனம் ஒன்று எனக்கில்லையே
சிலையாக நான் உன்னை நினைக்கவில்லையே
உண்மைக்கும் உழைப்புக்கும் உயர்வூட்டுவாய்
உயர்வான வாழ்வுக்கு வழிகாட்டுவாய்

சித்தருக்கு அருள்செய்த சிவகாமியே
பட்டருக்கு காட்சிதந்த அபிராமியே
பாருலகைக் காத்தருளும் மாசக்தியே
பாலகனைக் காத்தருள்வாய் ஞானாக்ஷியே.

லெ. சோமு

## ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி துணை

ஜெயஜெய ஞானாக்ஷி ஓம்ஸ்ரீ
ஜெயஜெய ஞானாக்ஷி.
ஜெய ஜெய ஜெய வெனப்
பாடிப் பணிந்தோம்
ஜெகமெங்கும் நிறைந்திடுவாய், ஓம்ஸ்ரீ
ஜெய ஜெய ஞானாக்ஷி.

ஆதியும் நீயே அந்தமும் நீயே
அருள்புரிவாய் தாயே, அம்மம்மா
அருள்புரிவாய் தாயே
ஜோதியும் நீயே சொந்தமும் நீயே
துணை புரிவாயம்மா, ஓம்ஸ்ரீ
ஜெய ஜெய ஞானாக்ஷி.

நாதமும் நீயே நால்வகை வேதமும்
எல்லாம் உனதருளே அம்மம்மா
எல்லாம் உனதருளே
நன்மைகள் தந்து தீமைகளைகற்றி
நலம்தரவந்திடுவாய், ஓம்ஸ்ரீ
ஜெய ஜெய ஞானாக்ஷி.

திருச்சி மஹாஸ்வாமி சிந்தையில் நின்று
சித்துக்கள் புரிபவளே அம்மம்மா
சித்துக்கள் புரிபவளே
திருவடி வணங்கிடும் அடியவர்தம்மைக்
காத்திட வந்திடுவாய் ஓம்ஸ்ரீ
ஜெயஜெய ஞானாக்ஷி.

காலையும் நீயே மாலையும் நீயே
கதிரவன் ஒளி நீயே அம்மம்மா
கதிரவன் ஒளி நீயே
காரிருள் நீக்கி பேரொளி வழங்கிட
கடிதினில் வந்திடுவாய் ஓம்ஸ்ரீ
ஜெயஜெய ஞானாக்ஷி.

வானமும் பூமியும் மாபெரும் கடலும்
எல்லாம் உன்வடிவே-அம்மம்மா
எல்லாம் உன்வடிவே.
வான்மழை தந்து வறுமைகள் நீக்கிட
வந்தருள் புரிந்திடுவாய்-ஓம்ஸ்ரீ
ஜெயஜெய ஞானாக்ஷி.

சண்டி சாமுண்டி சதுர்புஜ நாயகி
சத்தியத்திரு உருவே அம்மம்மா
சத்தியத்திரு உருவே
சங்கடம் நீங்கி சகல நலம்பெற
சங்கரியே அருள்வாய்-ஓம்ஸ்ரீ
ஜெய ஜெய ஞானாக்ஷி.

கருநாடகத்தில் காஞ்சனபுரத்தில்
நிலையாய் இருப்பவளே-அம்மம்மா
நிலையாய் இருப்பவளே
கண்மணி உன்னைக் கனவிலும் மறவேன்
காத்திட வந்திடுவாய்- ஓம்ஸ்ரீ
ஜெய ஜெய ஞானாக்ஷி.

லெ. சோமு

**ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி துணை.**

சிற்பம் நிறை வடிழகுத்
தேரிலேறிவருவாள்
தேடிவரும் அன்பருக்குத்
திருவருளை தருவாள்

நாளும் ஒரு வாகனத்தில்
ஊர்வலமாய் வருவாள்
நாடிவரும் பக்தருக்கு
நலங்கள் எல்லாம் தருவாள்

வண்ண வண்ணச் சேலைகட்டி
மகிழ்வுடனே வருவாள்
வருந்துகின்ற அடியார்கள்
வாழ்வில் நலம்தருவாள்

கொஞ்சும் மொழி வஞ்சியவள்
குலுங்கும் தேரில் வருவாள்
கூடிநிற்கும் பக்தருக்குக்
கோடி நலம் தருவாள்

ஆடிவரும் தேரில்ஏறி
அன்னையவள் வருவாள்
வாடிநிற்கும் பயிருக்கெல்லாம்
வான்மழையைத் தருவாள்

உருண்டுவரும் தேரில்ஏறி
உத்தமியாள் வருவாள்
உலகில் வாழும் மனிதருக்கு
உயர்ந்த வாழ்வு தருவாள்

அசைந்து வரும் தேரில் ஏறி
அன்னையவள் வருவாள்
அன்பருள்ளம் மேவநின்று
அருளை அள்ளித்தருவாள்

லெ. சோமு

## ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி துணை

சிறுவாபுரியில் வாழ்ந்திடும் முருகா
சீக்கிரம் வருவாயே
சிந்தை மகிழ்ந்து உன்புகழ் பாடிட
செந்தமிழ் தருவாயே

மான் மகிழ் வள்ளியின் மனமகிழ்குமரா
மங்கலம் தருவாயே
மனச் சுமையெல்லாம் உன்னிடம் வைத்தேன்
மன்னித்து அருள்வாயே

தேவரைக் காத்து திருப்பரங்குன்றத்தில்
தெய்வானையை மணந்தாய்
தினம் தினம் உன்புகழ் பாடிடும்என்னை
ஏனோ நீ மறந்தாய்

தேனும் தினையும் நானும்தருவேன்
புசித்திட வருவாயே
தீமைகளை அகற்றி நன்மைகள்தந்தெனைக்
காத்திட வருவாயே.

வடிவேலுடனே மயில் மீதேறி
வாழ்ந்திட வருவாயே-நான்
வசித்திட எனக்கொரு வடிவழகான
வீட்டினை தருவாயே.

லெ. சோமு

ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி துணை

அற்புதமான வடிவேலன் - அவன்
அன்னைபரா சக்தி அன்பு மகன்
எல்லா நலன்களும் அவன்தருவான்
எப்பொழுதும் நம்மைக் காத்திடுவான்

வள்ளிக்கு வாய்த்த வடிவேலன்-அவன்
வெள்ளிமலை வாழும் வேந்தன் மகன்
வாடியபயிர்களைக் காத்திடுவான்
வறுமைகள் நீக்கி வளம் தருவான்

வீரத்தின் மறுபெயர் வேல்முருகன்
வெற்றியைத் தந்திடும் மால்முருகன்
கவலைகள் தந்திடும் கந்தன் குகன்
கண்ணிமை போல் நம்மைக் காத்திடுவான்

சேவல் கொடி கொண்ட செட்டிமகன்
செந்தூரில் வீரத்தைக் காட்டியவன்
ஏவல் பில்லிகளை ஓட்டியவன்
எதுவரினும் நம்மைக் காத்திடுவான்.

கார்த்திகைப் பெண்களின் வளர்ப்பு மகன்
கருணை முகம் கொண்ட வேல் முருகன்
கோலமயில் மீது வலம் வருவான்.
காலம் முழுதும் நம்மைக் காத்திடுவான்.

லெ. சோமு

## ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி துணை

அய்யா மலையை விட்டு ஓடிவா-முருகையா
மலையை விட்டு ஓடிவா.

வளையல் சுமந்தவா வள்ளியை மணந்தவா
வனவேடனாக வந்த வேலவா-நல்ல
வாழ்வதனை தந்திடவே ஓடிவா.

மாங்கனியை வேண்டியே மயில் மீதேறியே
உலகையெல்லாம் சுற்றிவந்த வேலவா-எனக்கு
உனதருளை தந்திடவே ஓடிவா.

ஞானப்பழமாகவே மலையின் மீதிலேறியே
ஆண்டியாக நின்றவடி வேலவா நான்
வேண்டும் வரம்தந்திடவே ஓடிவா.

தேவாதி தேவனே தெய்வானை நேயனே
தேடி வந்தேன் உன்னடியை வேலவா-உன்
திருவருளை தந்திடவே ஓடிவா.

சூரனை வதைத்தவா சுட்டபழம் தந்தவா
வீரனாக வந்து நின்ற வேலவா, என்
வேதனையை தீர்த்திடவே ஓடிவா.

லெ. சோமு

ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி துணை

மாயை எனும் வாழ்க்கையிலே
மதி மயங்கி அலைகின்றேன்
தாயே உன் அருளிருந்தால்
தர்ம வழி நடந்திடுவேன்

சேயாக என்னை உந்தன்
திருக் கரத்தில் ஏந்திடுவாய்
தாயாக நீ யிருந்து
தாலாட்டுப் பாடிடுவாய்

ஓயாத கவலையினால்
உன்பாதம் நான் மறந்தேன்
உலகாளும் நாயகியே
உனதருளைத் தந்திடுவாய்

நீரடித்து நீர்விலகி
வேறுபக்கம் செல்வதில்லை
நீயிருக்க என்குறையை
யாரிடத்தில் முறையிடுவேன்.

நான் பிறந்த உலகமிது
நாடகத்தின் மேடையம்மா
நாடகங்கள் யாவையுமே
நடத்துபவள் நீயம்மா

நாளை ஏது நடக்கும் என்று
நான் அறிய முடியாது
நாயகியே உன்னையன்றி
வேறு துணை எனக்கேது.

லெ. சோமு

# அபிராமி அந்தாதி

## காப்பு

### (கட்டளைக் கலித்துறை)

தார் அமர் கொன்றையும் சண்பக மாலையும் சாத்தும் தில்லை
ஊரார்தம் பாகத்து உமை மைந்தனே! உலகு ஏழும்பெற்ற
சீர் அபிராமி அந்தாதி எப்போதும் என்சிந்தை உள்ளே
கார் அமர் மேனிக் கணபதியே! நிற்கக் கட்டுரையே.

## நூல்

### தேவியினது திருமேனியின் அழகைச் சிறப்பித்தல்

உதிக்கின்ற செங்கதிர், உச்சித் திலகம், உணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்கம், மாதுளம் போது, மலர்க்கமலை
துதிக்கின்ற மின்கொடி மென்கடிக் குங்குமத்தோயம்என்ன
விதிக்கின்ற மேனி அபிராமி எந்தன் விழுத்துணையே (1)

### எல்லாம் அவளே என்று அறிதல்

துணையும், தொழும் தெய்வமும், பெற்ற தாயும் சுருதிகளின்
பணையும், கொழுந்தும் பதிகொண்ட வேரும் பனிமலர்ப்பூங்
கணையும், கருப்புச் சிலையும், மென்பாசங்குசமும், கையில்
அணையும், திரிபுர சுந்தரி, ஆவது அறிந்தனமே. (2)

### அறிந்து விலகி அஞ்சித் திருவடி அடைதல்

அறிந்தேன் எவரும் அறியா மறையை; அறிந்து கொண்டு,
செறிந்தேன், உனது திருவடிக்கே; திருவே! வெருவிப்
பிறிந்தேன்; நின் அன்பர் பெருமை எண்ணாத கருமநெஞ்சால்
மறிந்தே விழும் நரகுக்கு உறவாய மனிதரையே. (3)

இறைவனும் தேவரும், மாயா முனிவரும் வந்து, சென்னி

மனிதரும், தேவரும், மாயா முனிவரும் வந்து, சென்னி
குனிதரும் சேவடிக் கோமளமே! கொன்றை வார்சடைமேல்
பனிதரும் திங்களும், பாம்பும், பகீரதியும் படைத்த
புனிதரும் நீயும், என் புந்தி எந்நாளும் பொருந்துகவே. (4)

### தேவியின் திருவடி தம் தலைக்கண் என்றல்

பொருந்திய முப்புரை, செப்புரை செய்யும் புணர்முலையால்
வருந்திய வஞ்சிம் மருங்குல் மனோன்மணி வார்சடையோன்
அருந்திய நஞ்சு அமுதாக்கிய அம்பிகை அம்புயமேல்
திருந்திய சுந்தரி அந்தரி பாதம் என் சென்னியதே. (5)

### மூன்று கரணங்களாலும் வழிபடல்

சென்னியது உன்பொன் திருவடித்தாமரை, சிந்தையுள்ளே
மன்னியது உன்திருமந்திரம், சிந்துர வண்ணப்பெண்ணே!
முன்னிய நின் அடியார் உடன்கூடி, முறைமுறையே
பன்னியது, என்றும் உன்தன் பரமாகமா பத்ததியே. (6)

### உயிர்க்கு முந்திநிலை வேண்டல்

ததியுறு மத்தில் சுழலும் என்ஆவி தளர்வு இலதோர்
கதியுறு வண்ணம் கருது கண்டாய்; கமலாலயனும்
மதியுறு வேணி மகிழ்நானும் மாலும் வணங்கி என்றும்
துதியுறு சேவ்டியாய்! சிந்தூரானன சுந்தரியே! (7)

### அம்மையின் திருவடி அடியேன் சிந்தையில் திகழ்தல்

சுந்தரி, எந்தை துணைவி என்பாசத் தொடரை எல்லாம்
வந்துஅரி சிந்துர வண்ணத்தினாள், மகிடன் தலைமேல்
அந்தரி, நீலி, அழியாத கன்னிகை, ஆரணத்தோன்
கம்தரி கைத்தலத்தாள், மலர்த்தாள் என் கருத்தனவே. (8)

### தேவியின் காட்சியினை விரும்பி நிற்றல்

கருத்தன எந்தைதன் கண்ணன வண்ணக் கனகவெற்பில்
பெருத்தன, பால் அழும் பிள்ளைக்கு நல்கின, பேர்அருள்கூர்
திருத்தன பாரமும், ஆரமும், செங்கைச் சிலையும், அம்பும்,
முருத்தன மூரலும், நீயும் அம்மே! வந்துஎன்
முன்நிற்கவே (9)

### எக்காலத்தும் அம்மையின் திருவடிகளை வழிபடல்

நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் நினைப்பது உன்னை;
என்றும் வணங்குவது உன்மலர்த்தாள்; எழுதாமறையின்
ஒன்றும் அரும்பொருளே! அருளே! உமையே! இமையத்து
அன்றும் பிறந்தவளே அழியாமுத்தி ஆனந்தமே! (10)

### திருவடிப் பெருமையினைப் புலகல்

ஆனந்தமாய், என் அறிவாய் நிறைந்த அமுதமுமாய்,
வான் அந்தம் ஆன வடிவுடையாள் மறை நான்கினுக்கும்
தான் அந்த மான, சரணாரவிந்தம் தவள நிறக்
கானம்தம் ஆடரங்காம் எம்பிரான்முடிக் கண்ணியதே. (11)

### தம் புண்ணியச் செயலை வியத்தல்

கண்ணியது உன்புகழ்; கற்பது உன்நாமம்; கசிந்து பக்தி
பண்ணியதுன்இரு பாதா அம்புயத்தில்; பகல் இரவா
நண்ணியது உன்னை நயந்தோர் அவையத்து;
நான்முன்செய்த
புண்ணியம் ஏது? என் அம்மே! புவிஏழையும்
பூத்தவளே! (12)

## உன்னை அன்றிப் பிறதெய்வம் தொழேன் என்றல்

பூத்தவளே! புவனம் பதினான்கையும்; பூத்தவண்ணம்
காத்தவளே! பின், கரந்தவளே! கறைக்கண்டனுக்கு
மூத்தவளே! என்றும்மூவா முகுந்தற்கு இளையவளே!
மாத்தவதளே! உன்னை அன்றி மற்றோர் தெய்வம்
வந்திப்பதே! 13

## அம்மையின் எளிமையை வியத்தல்

வந்திருப்பவர் உன்னை வானவர் தானவர் ஆனவர்கள்
சிந்திப்பவர் நற்றிசைமுகர் நாரணர் சிந்தை உள்ளே
பந்திப்பவர் அழியாப் பரமானந்தர் பாரில்உன்னைச்
சந்திப்பவர்க்கு எளிதாம் எம்பிராட்டி நின்தண்ணளியே (14)

## வழிபடுவோர் பெறும் பேறுகள்

தண்ணளிக்கு என்று, முன்னே பலகோடி தவங்கள்செய்வார்
மண் அளிக்கும் செல்வமோ பெறுவார்? மதிவானர்தம்
விண்அளிக்கும் சொல் பரிமள யாமளைப் பைங்கிளியே! (15)

## தம் சிற்றறிவின் எல்லைக்கு எட்டியதை வியத்தல்

கிளியே! கிளைஞர் மனத்தே கிடந்து கிளர்ந்து ஒளிரும்
ஒளியே! ஒளிரும் ஒளிக்கும் இடமே! எண்ணில் ஒன்றும்
இல்லா
வெளியே! வெளிமுதற் பூதங்கள் ஆகி விரிந்த அம்மே!
அளியேன்! அறிவு அளவிற்கு அளவானது அதிசயமே! (16)

## பதியையும் வென்ற பண்புடைமை

அதிசயமான வடிவுடையாள்! அரவிந்தம் எல்லாம்
துதிசய ஆவன சுந்தரவல்லி! துணை இரதி
பதிசயா ஆனது அபசயமாக, முன் பார்த்தவர்தம்
மதிசயம் ஆக அன்றோ, வாமபாகத்தை வவ்வியதே (17)

### காலன் வருங்கால் காத்தருள வேண்டல்

வவ்விய பாகத்து இறைவரும் நீயும் மகிழ்ந்திருக்கும்
செல்வியும், உங்கள் திருமணக்கோலமும் சிந்தை உள்ளே
அவ்வியம் தீர்த்து என்னை ஆண்ட பொற்பாதமும்
ஆகிவந்து
வெவ்விய காலன் என்மேல் வரும்போது வெளிநிற்கவே (18)

### ஆனந்தம் அளித்த திருஉளக்கருத்தைப் புகழ்தல்

களிநின்ற வெள்ளம் கரைகண்டது இல்லை; கருத்தின்
உள்ளே
தெளிநின்ற ஞானம் திகழ்கின்றது; என்ன திருஉளமோ?
ஒளிநின்ற கோணங்கள் ஒன்பதும் மேவி உறைபவளே! (19)

### உறைவிடம் யாதோ என வினாவுதல்

உறைகின்ற நின்திருக்கோயில் நின்கேள்வர் ஒரு பக்கமோ
அறைகின்ற நான்மறையின் அடியோ முடியோ, அமுதம்
நிறைகின்ற வெண்திங்களோ கஞ்சமோ என்றன் நெஞ்சகமோ
மறைகின்ற வாரிதியோ? பூரணாசல மங்கலையே! (20)

### காட்சியில் திளைத்து நிற்றல்

மங்கலை, செங்கலசம் முலையாள், மலையாள் வருணச்
சங்கலை செங்கைச் சகலகலாமயில், தாவுகங்கை
பொங்கலை தங்கும் புரிசடையோன் புடை ஆளுடையாள்
பிங்கலை, நீலி, செய்யாள், வெளியாள், பசும்பொற்
கொடியே! (21)

### பிறவா வண்ணம் தடுத்தாட்கொள்ள வேண்டுதல்

கொடியே! இளவஞ்சிக் கொம்பே! எனக்கு வம்பே பழுத்த
படியே! மறையின் பரிமளமே! பனிமால் இமயப்
பிடியே! பிரமன் முதலாய தேவரைப் பெற்ற அம்மே!
அடியேன் இறந்து இங்கு பிறவாமல் வந்து ஆண்டு
கொள்ளே. (22)

### தம் குறிக்கோளைக் கூறுதல்

கொள்ளேன், மனத்தில் நின்கோலம் அல்லாது அன்பர்
கூட்டந்தன்னை
உள்ளேன், பரசமயா விரும்பேன்; வியன் மூவுலகுக்கு
விரும்பேன்; வியன் மூவுலகுக்கு
உள்ளே! அனைத்தினுக்கும் புறம்பே! உள்ளத்தே விளைந்த
கள்ளே! களிக்கும் களியே! அளிய என்கண் மணியே! (23)

### நின்பேறுபெற்ற நான், பிறரை வணங்கேன் என்றல்

மணியே! மணியின் ஒளியே! ஒளிரும் மணிபுனைந்த
அணியே! அணியும் அணிக்கு அழகே! அணுகாதவர்க்குப்
பணியே! பிணிக்குமறந்தே அமரர் பெருவிருந்தே!
பணியேன் ஒருவரை நின்பத்ம பாதம் பணிந்தபின்னே (24)

### முன்னைத் தவத்தின் சிறப்பினை மொழிதல்

பின்னே திரிந்து உன்அடியாரைப் பேணிப் பிறப்பு அறுக்க
முன்னே தவங்கள் முயன்று கொண்டேன்; முதல்மூவருக்கும்
அன்னே! உலகுக்கு அபிராமி என்னும் அரும் மருந்தே
என்னே? இனிஉன்னை யான் மறவாமல் நின்று
ஏத்துவனே (25)

### அருள் பெற்றோரின் உயர்வை அறிவித்தல்

ஏத்தும் அடியவர், ஈரேழ் உலகினையும் படைத்தும்
காத்தும் அழித்தும் திரிபவளாம், கமழ்பூங்கடம்பு
சாத்தும் குழல்அணங்கே! மணம்நாறும் நின்தாள்
இணைக்கு என்
நாத்தங்கு புன்மொழி ஏறியவாறு நகை உடைத்தே (26)

### திருவருள் புரிந்த செயலை வியத்தல்

உடைத்தனை வஞ்சப் பிறவியை; உள்ளம் உருகும் அன்பு
படைத்தனை; பத்ம பதயுகம் சூடும் பணி எனக்கே
அடைத்தனை; நெஞ்சத்து அழுக்கை எல்லாம்
நின்அருட்புனலால்
துடைத்தனை; சுந்தரி! நின்அருள் ஏதென்றுசொல்லுவதே (27)

### அடிதொழுவார் அடையும் பேறு

சொல்லும் பொருளும் என நடமாடும் துணைவருடன்
புல்லும் பரிமளப் பூங்கொடியே! நின் புதுமலர்த்தாள்
அல்லும் பகலும் தொழு பவர்க்கே அழியா அரசும்
செல்லும் தவநெறியும் சிவலோகமும் சித்திக்குமே. (28)

### அபிராமி எல்லாமாக இருக்கும் சிறப்பு

சித்தியும், சித்திதரும் தெய்வம் ஆகித் திகழும் பரா
சத்தியும், சத்தி தழைக்கும் சிவமும், தவம் முயல்வோர்
முத்தியும் முத்திக்கு வித்தும் வித்தாகி முளைத்து எழுந்த
புத்தியும், புத்தியி னுள்ளே புரக்கும் புரத்தை அன்றே (29)

### குற்றம் செய்யினும் குணம் எனக் கொள்ள வேண்டுதல்

அன்றே தடுத்து என்னை ஆண்டுகொண்டாய்;
கொண்டது அல்ல என்கை
நன்றே உனக்கு? இனிநான் என்செயினும், நடுக்கடலுள்
சென்றே விழினும் கரை யேற்றுகை நின் திருஉளமே;
ஒன்றே! பலஉருவே! அருவே! என் உமையவளே! (30)

### ஆட்கொண்ட திறத்தை அறிவித்தல்

உமையும் உமையொரு பாகனும் ஏகஉருவில் வந்துஇங்கு
எமையும் தமக்கு அன்பு செய்யவைத்தார்; இனி
எண்ணுதற்குச்
சமையங்களும் இல்லை; ஈன்றெடுப்பாள் ஒருதாயும் இல்லை;
அமையும் அமையுறு தோளியர்மேல் வைத்த ஆசையுமே.(31)

## வலியவந்து ஆட்கொண்டதைப் புகழ்தல்

ஆசைக் கடலில் அகப்பட்டு அருளற்ற அந்தகன் கைப்
பாசத்தில் அல்லல்பட இருந்தேனை நின் பாதம் என்னும்
வாசக் கமலம் தலைமேல் வலியவைத்து ஆண்டுகொண்டே
நேசத்தை என்சொல்லுவேன்? ஈசர் பாகத்து நேரிழையே! (32)

## எமபயத்தை போக்கி அருள வேண்டுதல்

இழைக்கும் வினைவழியே அடும்காலன் எனைநடுங்க
அழைக்கும் பொழுது வந்து அஞ்சல் என்பாய்;
அத்தர்சித்தம் எல்லாம்
குழைக்கும் களபக் குவிமுலை யாமளைக் கோமளமே!
உழைக்கும் பொழுது உன்னையே அன்னையே!
என்பன் ஓடி வந்தே (33)

## அம்மை எழுந்தருளிய இடங்கள்

வந்தே சரணம் புகும் அடியாருக்கு, வானுலகம்
தந்தே பரிவோடு தான் போய் இருக்கும் சதுர்முகமும்,
பைந்தேன் அலங்கல் பருமணி ஆகமும், பாகமும், பொற்
செந்தேன் மலரும், அலர் கதிர் ஞாயிறும், திங்களுமே. (34)

## தாம்பெற்ற தவப்பேற்றை வியத்தல்

திங்கட் பசுவின் மணநாறும் சீறடி சென்னிவைக்க
எங்கட்கு ஒருதவம் எய்தியவா! எண் இறந்த விண்ணோர்
தங்கட்கும் இந்தத் தவம் எய்துமோ? தரங்கக் கடலுள்
வெங்கட் பணி அணைமேல் துயில் கூரும்
விழுப்பொருளே. (35)

### திருவருளின் இயல்பை அறிவித்து அருள வேண்டுதல்

பொருளே, பொருள் முடிக்கும் போகமே, அருள் போகம் செய்யும்
மருளே, மருளில் வரும் தெருளே என் மனத்துவஞ்சத்து
இருள் ஏதும் இன்றி ஒளி வெளி ஆகி இருக்கும் உன்தன்
அருள்ஏது! அறிகின்றிலேன், அம்புயாதனத்து அம்பிகையே! (36)

### அம்மையின் அணிகலங்களை அறிவித்தல்

கைக்கே அணிவது கன்னலும் பூவும்; கமலம் அன்ன
மெய்க்கே அணிவது வெண்முத்துமாலை; விடஅரவின்
பைக்கே அணிவது பன்மணிக் கோவையும் பட்டும்; எட்டுத்
திக்கே அணியும் திரு உடையானிடம் சேர்பவளே! (37)

### உலகத்தவர்க்கு அம்மையை வழிபடும்படி கூறுதல்

பவளக் கொடியிற் பழுத்த செவ்வாயும், பனிமுறுவல்
தவளத் திருநாகையும் துணையா, எங்கள் சங்கரனைத்
துவளப் பொருது, துடியிடை சாய்க்கும் துணைமுலையாள்
அவளைப் பனிமின் கண்டீர், அமராவதி ஆளுகைக்கே. (38)

### அருள்பெற என்குறையேஅன்றி நின்குறை அன்றுஎனல்

ஆளுகைக்கு உந்தன் அடித்தாமரைகள் உண்டு அந்தகன்பால்
மீளுகைக்கு, உந்தன் விழியின் கடை உண்டு; மேலிவற்றின்
மூளுகைக்கு, என்குறை, நின்குறையே அன்று: முப்புரங்கள்
மாளுகைக்கு, அம்பு தொடுத்த வில்லான்பங்கில் வாணுதலே! (39)

## தம் புண்ணியத்தின் பயனை வியத்தல்

வாள்நுதல் கண்ணியை, விண்ணவர் யாவரும்
வந்திறைஞ்சிப்
பேணுதற்கு எண்ணிய எம்பெருமாட்டியை, பேதை நெஞ்சில்
காணுதற்கு அண்ணியள் அல்லாத கன்னியை, காணும்
பூணுதற்கு எண்ணிய எண்ணம் அன்றோ, முன்செய்! அன்பு
புண்ணியமே? (40)

## தம் மனத்திற்கு அறிவித்தல்

புண்ணியம் செய்தனமே மனமே! புதுப்பூங்குவளைக்
கண்ணியும் செய்ய கணவரும் கூடு நம் காரணத்தால்
நண்ணி இங்கே வந்து தம் அடியார்கள் நடுவிருக்கப்
பண்ணி நம் சென்னியின்மேற் பத்மபாதம் பதித்திடவே (41)

## அம்மையின் ஆற்றலை வியத்தல்

இடங்கொண்டு விம்மி, இணைகொண்டு இறுகி, இளகி முத்து
வடங்கொண்ட கொங்கைமலைகொண்டிறைவர்வலிய
நெஞ்சை
நடங்கொண்ட கொள்கை நலம்கொண்ட நாயகி, நல் அரவின்
படம்கொண்ட அல்குல் பணிமொழி வேதப் பரிபுரையே! (42)

## அம்மையினது நேர்பாதியின் சிறப்பு

பரிபுரச் சீறடிப் பாசாங்குசை, பஞ்ச பாணி இன் சொல்
திரிபுரசுந்தரி, சிந்தூர மேனியள் தீமைநெஞ்சில்
புரிவர வஞ்சரை அஞ்சக்குனி பொருப்புச்சிலைக் கை,
எரி புரை மேனி, இறைவர் செம்பாகத்து இருந்தவளே. (43)

### அம்மையே மேலான தெய்வம் என்றல்

தவளே இவள் எங்கள் சங்கரனார் மனை மங்கலமாம்
அவளே அவர் தமக்கு அன்னையும் ஆயினள்
ஆகையினால்
இவளே கடவுளர் யாவர்க்கும் மேலை இறைவியும் ஆம்
துவளேன் இனி ஒரு தெய்வம் உண்டாக மெய்த்தொண்டு
செய்தே! (44)

### குற்றம் பொருத்தருள வேண்டுதல்

தொண்டு செய்யாதுநின்பாதம் தொழாது துணிந்து இச்சை
பண்டு செய்தார் உளரோ இலரோ? அப்பரிசு அடியேன்
கண்டு செய்தால் அது கைதவமோ? அன்றிச் செய்தவமோ
மிண்டு செய்தாலும் பொறுக்கை நன்றே பின் வெறுக்கை
அன்றே! (45)

### வெறுக்கினும் வாழ்த்துவேன் என்றல்

வெறுக்கும் தகைமைகள் செய்யினும், தம்
அடியாரைமிக்கோர்
பொறுக்கும் தகைமை புதியது அன்றே; புதுநஞ்சை உண்டு
கறுக்கும் திருமிடற்றான் இடப்பாகம் கலந்த பொன்னே!
மறுக்கும் தகைமைகள் செய்யினும், யானுன்னை
வாழ்த்துவனே. (46)

### தம் அநுபூதிப் பயனை அறிவித்தல்

வாழும்படி ஒன்று கண்டு கொண்டேன்; மனத்தே ஒருவர்
வீழும்படி அன்று; விள்ளும்படி அன்று; வேலை நிலம்
ஏழும் பருவரை எட்டும் எட்டாமல் இரவுபகல்
சூழும் சுடர்க்கு நடுவே கிடந்து சுடர்கின்றதே. (47)

அம்மையை ஒரு கணமேனும்தியானித்தவர் பின்பிறவார்

சுடரும் கலை மதி துன்றும் சடைமுடிக் குன்றில் ஒன்றிப்
படரும் பரிமளப் பச்சைக் கொடியைப் பதித்து நெஞ்சில்
இடரும் தவிர்த்து இமைப்போதிருப்பார், பின்னும்
எய்துவரோ
குடரும் கொழுவும் குருதியும் தோயும் குரம்பையிலே. (48)

எம பயத்தைப் போக்கிக் காக்க வேண்டுதல்

குரம்பை அடுத்துக் குடிபுக்க ஆவி, வெங் கூற்றுக்கு இட்ட
வரம்பை அடுத்து மறுக்கும் அப்போது, வளைக்கை
அமைத்து
அரம்பை அடுத்து அரிவையர் சூழ வந்து அஞ்சல்
என்பாய்
நரம்பை அடுத்த இசை வடிவாய் நின்ற நாயகியே. (49)

பல திருப்பெயர்களைக்கூறி இன்புறம்

நாயகி நான்முகி நாராயணி கைநளின பஞ்ச
சாயகி சாம்பவி சங்கரி சாமளை சாதிநச்சு
வாயகி மாலினி வாராகி சூலினி மாதங்கி என்று
ஆய கியாதி உடையாள் சரணம் அரண் நமக்கே (50)

அம்மையின் அடியார்கள் பிறப்பு இறப்புகளை
அடையார்

அரணம் பொருள் என்று அருள் இலாத அசுரர் தங்கள்
முரண் அன்று அழிந்த முனிந்த பெம்மானும் முகுந்தனுமே,
சரணம் சரணம் என நின்ற நாயகி தன் அடியார்,
மரணம் பிறவி இரண்டும் எய்தார், இந்த வையகத்தே. (51)

### முன்பிறவியில் அம்மையை வழிபட்டவர் அடையும் பேறுகள்

வையகம், துரகம்,மதகரி, மா மகுடம், சிவிகை
பெய்யும் கனகம், பெருவிலை ஆரம், பிறைமுடித்த
ஐயன் திருமனையாள் அடித் தாமரைக்கு அன்பு முன்பு
செய்யும் தவமுடையார்க்கு உளவாகிய சின்னங்களே. (52)

### சத்தியோகமே அன்றி வேறு பயனுடைய தவம் இல்லை

சின்னஞ்சிறிய மருங்கினில் சாத்திய செய்ய பட்டும்
பென்னம் பெரிய முலையும், முத்தாரமும், பிச்சி மொய்த்த
கன்னங்கரிய குழலும், கண்மூன்றும், கருத்தில்வைத்துத்
தன்னந்தனி இருப்பார்க்கு, இது போலும் தவம்
இல்லையே (53)

### அம்மையின் அடிகட்கு ஆற்றுப்படுத்தல்

இல்லாமை சொல்லி ஒருவர் தம்பால் சென்று இழிவுபட்டு
நில்லாமை நெஞ்சில் நினைகுவிரேல், நித்தம் நீடுதவம்
கல்லாமை கற்ற கயவர் தம்பால் ஒரு காலத்திலும்
சொல்லாமை வைத்த திரிபுரை பாதங்கள் சேர்மின்களே. (54)

### கைம்மாறு கருதாத கருணைத் திறம்

மின் ஆயிரம் ஒரு மெய்வடி வாகி விளங்குகின்றது
அன்னாள் அகமகிழ் ஆனந்தவல்லி அருமறைக்கு
முன்னாய் நடுஎங்குமாய் முடிவாய் முதல்வி தன்னை
உன்னாதுஒழியினும் உன்னினும் வேண்டுவது
ஒன்றில்லையே. (55)

### அருள்புரியும் அருமையின் வியத்தல்

ஒன்றாய் அரும்பிப் பலவாய் விரிந்து இவ்வுலகு எங்குமாய்
நின்றாள் அனைத்தையும் நீங்கி நிற்பாள் எந்தன் நெஞ்சின்
உள்ளே
பொன்றாது நின்று புரிகின்றவா! இப்பொருள் அறிவார்
அன்று ஆலிலையில் துயின்ற பெம்மானும் என்
ஐயனுமே (56)

### அடியேனை ஆளும்வகை இதுவோ என்றல்

ஐயன் அளந்தபடி இரு நாழி கொண்டு, அண்டம் எல்லாம்
உய்ய அறம் செயும் உன்னையும் போற்றி, ஒருவர் தம்பால்
செய்ய பசுந்தமிழ்ப் பாமாலையும் கொண்டு சென்று பொய்யும்
மெய்யும் இயம்பவைத்தாய்; இதுவோ, உன்தன்
மெய்யருளே? (57)

### நின்னை அன்றிப் பற்றுக்கோடு வேறில்லை என்றல்

அருணாம் புயத்தும் என் சித்தாம்புயத்தும் அமர்ந்திருக்கும்
தருணாம் புயமுலைத் தையல்நல்லாள், தகைசேர் நயனக்
கருணாம்புயமும், வதனாம்புயமும் காரம்புயமும்
சரணாம்புயமும் அல்லால் கண்டிலேன் ஒருதஞ்சமுமே, (58)

### குற்றம் பொறுக்க வேண்டுதல்

தஞ்சம் பிறிது இல்லை ஈது அல்லது, என்று உன்
தவநெறிக்கே
நெஞ்சம் பயில நினைக்கின்றேன்; ஒற்றை நீள் சிலையும்
அஞ்சு அம்பும் இக்கு அலராகி நின்றாய்; அறியார் எனினும்
பஞ்சு அஞ்சு மெல் அடியார் பெற்ற பாலரையே. (59)

### அம்மையார் அருள் புரிந்ததைப் பாராட்டல்

பாலினும் சொல் இனியாய்! பனிமா மலர்ப் பாதம் வைக்க
மாலினும், தேவர் வணங்க நின்றோன் கொன்றை
வார்சடையின்
மேலினும், கீழ்நின்று வேதங்கள் பாடும் மெய்ப்பீடம் ஒரு
நாலினும், சால நன்றோ அடியேன் முடை நாய்த்
தலையோ? (60)

### தாம் பெற்ற பேற்றைப் புகழ்ந்து பாராட்டல்

நாயேனையும் இங்கு ஒரு பொருளாக நயந்து வந்து,
நீயே நினைவின்றி ஆண்டுகொண்டாய்; நின்னை
உள்ளவண்ணம்
பேயேன் அறியும் அறிவு தந்தாய்; என்ன பேறு பெற்றேன்
தாயே, மலைமகளே, செங்கண்மால் திருத்தங்கைச்சியே. (61)

### தம்சிந்தையில் என்றும் திகழும் பொருளைத் தெரிவித்தல்

தங்கச் சிலை கொண்டு தானவர் முப்புரம் சாய்த்து, மத
வெங்கண் கரிஉரி போர்த்த செஞ்சேவகன், மெய்யடையக்
கொங்கைக் குரும்பைக் குறியிட்ட நாயகி, கோகனகச்
செங்கைக் கரும்பும், மலரும், எப்போதும் என்
சிந்தையதே (62)

### அறிவில்லாத மக்களுக்கு இரங்கி வருந்துதல்

தேறும்படி சில ஏதுவும் காட்டி, முன் செல்கதிக்குக்
கூறும் பொருள், குன்றில் கொட்டும் தறிகுறிக்கும் சமயம்
ஆறும் தலைவி இவளாய் இருப்பது அறிந்திருந்தும்
வேறும் சமயம் உண்டு என்று கொண்டாடிய
வீணருக்கே (63)

### உள்ளத்தில் தாம்கொண்ட உறுதி கூறல்

வீணே பலி கவர் தெய்வங்கள் பால் சென்று, மிக்க அன்பு
பூணேன்; உனக்கு அன்பு பூண்டுகொண்டேன்; நின்புகழ்ச்சி
அன்றிப்
பேணேன், ஒரு பொழுதும்; திருமேனிப்ரகாசம் அன்றிக்
காணேன், இரு நிலமும் திசை நான்கும் ககனமுமே (64)

### அம்மையின் வல்லபத்தை வியத்தல்

ககனமும் வானும் புவனமும் காண, விற் காமன் அங்கம்
தகனம் முன் செய்த தவப்பெருமாற்கு, தடக்கையும் செம்
முகனும், முந்நான்கு இருமூன்று எனத் தோன்றிய
மூதறிவின்
மகனும் உண்டாயது அன்றோ? வல்லி; நீ செய்த
வல்லபமே (65)

### பொருளின் உயர்வினால் இந்நூல் சிறந்தது எனல்

வல்லபம் ஒன்று அறியேன்; சிறியேன்; நின் மலரடிச் செம்
பல்லவம் அல்லது பற்று ஒன்று இலேன்; பசும்பொற்
பொருப்பு
வில்லவர் தம்முடன் வீற்றிருப்பாய்! வினையேன் தொடுத்த
சொல் அவமாயினும், நின்திரு நாமங்கள் தோத்திரமே. (66)

### திருவடிகளை நினையாதவரின் நிலைமை இது எனல்

தோத்திரம் செய்து, தொழுது, மின்போலும் தன்தோற்றம் ஒரு
மாத்திரப் போதும் மனத்தில் வையாதவர் வண்மை, குலம்,
கோத்திரம், கல்வி,குணம், குன்றி, நாளும் குடில்கள் தோறும்
பாத்திரம் கொண்டு பலிக்கு உழலாநிற்பர் பார் எங்குமே. (67)

### வழிபடுவோர் தன்மையினை அறிவித்தல்

பாரும், புனலும், கனலும், வெங்காலும், படர்விசும்பும்,
ஊரும் முருகு சுவை ஒளி ஊறுஒலி ஒன்றுபடச்
சேரும் தலைவி சிவகாமசுந்தரி, சீறடிக்கே
சாரும் தவம் உடையார் படையாத தனம் இல்லையே. (68)

### அம்மையை வழிபட்டோர் அடையும் இம்மைப் பயன்கள்

தனம் தரும், கல்விதரும், ஒருநாளும் தளர்வு அறியா
மனம்தரும், தெய்வவடிவம் தரும், நெஞ்சில் வஞ்சம் இல்லா
இனம்தரும், நல்லன எல்லாம்தரும், அன்பர் என்பவர்க்கே
கனம்தரும் பூங்குழலாள், அபிராமி கடைக்கண்களே. (69)

### அடிமையின் காட்சியில் திளைத்து மகிழ்தல்

கண்களிக்கும்படி கண்டுகொண்டேன் கடம்பா அடவியில்
பண்களிக்கும் குரல் வீணையும், கையும்; பயோதரமும்,
மண்களிக்கும் பச்சை வண்ணமும் ஆகி; மதங்கர்குலப்
பெண்களில் தோன்றிய எம்பெருமாட்டிதன் பேரழகே (70)

### அம்மையின் துணை இருக்கக் குறை ஒன்றும் இல்லை என்றல்

அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி; அருமறைகள்
பழகிச் சிவந்த பாதாம்புயத்தாள், பனி மா மதியின்
குழவித் திருமுடிக் கோமள யாமளைக் கொம்பு இருக்க
இழவுற்று நின்ற நெஞ்சே! இரங்கேல், உனக்கு என்
குறையே? (71)

### பிறவித் துன்பத்தைப் போக்க வேண்டுதல்

என்குறை தீர நின்று ஏத்துகின்றேன் இனியான் பிறக்கின்
நின்குறையே அன்றி யார் குறை காண்? இருநீள் விசும்பின்
மின்குறை காட்டி மெலிகின்ற நேர் இடை மெல்லியலாய்!
தன்குறை தீர எங்கோன் சடைமேல் வைத்த தாமரையே. (72)

### அம்மையின் தியானப் பொருள்கள் இவை எனல்

தாமம் கடம்பு, படைபஞ்ச பாணம், தனுக்கரும்பு,
யாமம் வயிரவர் ஏத்தும் பொழுது, எமக்கு என்று வைத்த
சேமம் திருவடி, செங்கைகள் நான்கு, ஒளி செம்மை,
அம்மை
நாமம் திரபுரை, ஒன்றோடு இரண்டு நயனங்களே. (73)

### அம்மையை தியானிப்பவர் அடையும் மறுமைப் பயன்

நயனங்கள் மூன்றுடை நாதனும், வேதமும், நாரணனும்
அயனும், பரவும் அபிராம வல்லி அடி இணையைப்
பயன் என்று கொண்டவர், பாவையர் ஆடவும் பாடவும், பொன்
சயனம் பொருந்து தமனியக் காவினில் தங்குவரே, (74)

### அம்மையின் வழிபட்டோர் சொர்க்க போகமும் வீடும் பெறுதல்

தங்குவர், கற்பக தாருவின் நீழலில்; தாயர் இன்றி
மங்குவர், மண்ணில் வழுவாப் பிறவியை; மால்வரையும்
பொங்கு உவர் ஆழியும், ஈரேழ் புவனமும் பூத்த உந்திக்
கொங்கு இவர் பூங்குழலாள் திருமேனி குறித்தவரே. (75)

### அம்மையின் அடித்தொண்டர்க்கு எமவாதனை இல்லை

குறித்தேன் மனத்தில், நின்கோலமெல்லாம்; நின்குறிப்பறிந்து
மறித்தேன் மறலி வருகின்ற நேர்வழி; வண்டுகிண்டி
வெறித்தேன் அவிழ்கொன்றை வேலிப் பிரான் ஒருகூற்றை,
மெய்யில்
பறித்தே குடிபுகுதும் பஞ்ச பாண பயிரவியே. (76)

### அம்மையின் திருப்பெயர் கூறி மகிழ்தல்

பயிரவி, பஞ்சமி, பாசாங்குசை, பஞ்சபானி, வஞ்சர்
உயிர் அவி உண்ணும் உயர் சண்டி, காளி, ஒளிரும் கலா
வயிரவி, மண்டலி, மாலினி, சூலி, வராகி என்றே
செயிர் அவி நான்மறைசேர் திரு நாமங்கள் செப்புவரே. (77)

### தம் அனுபவத்தைக் காட்டி அறிவுறுத்தல்

செப்பும் கனக கலசமும் போலும் திருமுலைமேல்
அப்பும் களப அபிராம வல்லி அணிதரளக்
கொப்பும் வயிரக் குழையும் விழியின் கொழும் கடையும்
துப்பும் நிலமும் எழுதிவைத்தேன் என்துணை விழிக்கே. (78)

### கருணைத்திறம் கண்டு கயவரை வெறுத்தல்

விழிக்கே அருளுண்டு அபிராமவல்லிக்கு வேதம் சொன்ன
வழிக்கே வழிபட நெஞ்சு உண்டு எமக்கு அவ்வழி கிடக்கப்
பழிக்கே சுழன்று வெம்பாவங்களே செய்து பாழ் நரகக்
குழிக்கே அழுந்தும் கயவர் தம்மோடு என்ன கூட்டு
இனியே? (79)

### தாம்பெற்ற ஆனந்தக் களிப்பு

கூட்டியவா, என்னைத் தன் அடியாரில், கொடியவினை
ஓட்டியவா, எண்கண் ஓடியவா, தன்னை உள்ளவண்ணம்
காட்டியவா, கண்ட கண்ணும் மனமும் களிக்கின்றவா
ஆட்டியவா நடம் ஆடகத் தாமரை ஆரணங்கே (80)

### அம்மையை அன்றிப் பிறரைத் தொழேன் என்றல்

அணங்கே! அணங்குகள் நின்பரிவாரங்கள் ஆகையினால்,
வணங்கேன் ஒருவரை, வாழ்த்துகிலேன் நெஞ்சில்,
வஞ்சகரோடு
இணங்கேன், எனது உனது என்றிருப்பார் சிலர் யாவரொடும்
பிணங்கேன், அறிவு ஒன்று இலேன், என் கண் நீ
வைத்தபேர் அளியே! (81)

### ஆனந்தத்தில் அழுந்தி நிற்றல்

அவிஆர் கமலத்தில் ஆரணங்கே, அகிலாண்டமும் நின்
ஒளியாக நின்ற ஒளிர் திருமேனியை உள்ளுதோறும்,'
கவிஆகி, அந்தக்கரணங்கள் விம்மி, கரைபுரண்டு
வெளியாய்விடின், எங்ஙனே மறப்பேன், நின் விரகினையே?(82)

### அம்மையை வழிபடுவோர் இந்திரர் ஆவர் என்றல்

விரவும் புதுமலர் இட்டு நின்பாத விரைக்கமலம்
இரவும் பகலும் இறைஞ்சவல்லார் இமையோர் எவரும்
பரவும் பதமும் அயிராவதமும் பகீரதியும்
உரவும் குலிதமும் கள்பகக் காவும் உடையவரே. (83)

### அம்மையின் அருளைப் பெறாதவர்க்கு அறிவுறுத்தல்

உடையாளை ஒல்கு செம்பட்டுடையாளை ஒளிர் மதிச் செஞ்
சடையாளை வஞ்சகர் நெஞ்சு அடையாளைத் தயங்கு நுண் நூல்
இடையாளை, எங்கள் பெம்மான் இடையாளை, இங்கு என்னை இனிப்
படையாளை, உங்களையும் படையா வண்ணம் பார்த்திருமே(84)

### அம்மையின் உருவொளித் தோற்றம் உரைத்தல்

பார்க்கும் திசைதொறும் பாசாங்குசமும்; பனிச்சிறை வண்டு
ஆர்க்கும் புதுமலர் ஐந்தும், கரும்பும், என் அல்லல் எல்லாம்
தீர்க்கும் திரிபுரையாள் திருமேனியும், சிற்றிடையும்
வார்க் குங்கும் முலையும் முலைமேல் முத்து மாலையுமே. (85)

### மரணம் அடையும் காலத்தில் உதவ வேண்டுதல்

மால் அயன் தேட, மறைதேட, வானவர் தேடநின்ற
காலையும், சூடகக் கையையும், கொண்டு கதித்த கப்பு
வேலை வெங்காலன் என் மேல் விடும்போது, வெளிநில்கண்டாய்
பாலையும் தேனையும் பாகையும் போலும் பனி மொழியே.(86)

### எளிதில் வந்து வெளிநின்ற கருணையைப் போற்றல்

மொழிக்கும் நினைவுக்கும் எட்டாத நின்திருமூர்த்தம் எந்தன்
விழிக்கும் வினைக்கும் வெளிநின்றதால்! விழியால் மதனை
அழிக்கும் தலைவர், அழியா விரதத்தை, அண்டம் எல்லாம்
பழிக்கும்படி, ஒரு பாகம் கொண்டு ஆளும் பராபரையே. (87)

### தகுதி அற்றவன் என்று என்னைக் கைவிடுதல் கூடாது என வேண்டுதல்

பரம் என்று உனை அடைந்தேன், தமியேனும், உன்பத்தருக்குள்
தரம் அன்று இவன் என்று தள்ளத்தகாது தரியலர்தம்
புரம் அன்று எரியப் பொருப்புவில் வாங்கிய, போதில் அயன்
சிரம் ஒன்று செற்ற, கையான் இடப்பாகம் சிறந்தவளே; (88)

### இறக்கும்பொழுது எளிது வந்து அருள வேண்டல்

சிறக்கும் கமலத் திருவே; நின்சேவடி சென்னி வைக்கத்
துறக்கம் திரும்நின் துணைவரும் நீயும் துரியும் அற்ற
உறக்கம் தரவந்து, உடம்போடு உயிர் உறவு அற்று அறிவு
மறக்கும் பொழுது, என் முன்னே வரல்வேண்டும், வருந்தியுமே. (89)

### அம்மையின் திருவருளால் எய்தாத பொருள் ஒன்றுமில்லை எனல்

வருந்தாவகை என் மனத்தாமரையினில் வந்து புகுந்து
இருந்தாள் பழைய இருப்பிடமாக இனி எனக்குப்
பொருந்தாத ஒருபொருள் இல்லை; விண்மேவும் புலவருக்கு
விருந்தாக வேலை மருந்தானதை நல்கும் மெல்லியலே. (90)

### தொழுவாரைத் தொழும் அன்பர் அடையும் பயனை அறிவித்தல்

மெல்லிய நுண்இடை மின் அனையாளை விரிசடையோன்
புல்லிய மென்முலைப் பொன் அனையாளை, புகழ்ந்து மறை
சொல்லிய வண்ணம் தொழும் அடியாரைத் தொழுமவர்க்கு,
பல்லியம் ஆர்த்து எழ, வெண்பகடு ஊரும் பதம் தருமே(91)

### பிற சமயங்களைத் தழுவேன் என்றல்

பதத்தே உருகி, நின் பாதத்திலே மனம் பற்றி உன்தன்
இதத்தே ஒழுக, அடிமை கொண்டாய்; இனி, யான் ஒருவர்
மதத்தே மதி மயங்கேன்; அவர் போன வழியும் செல்லேன்
முதத் தேவர் மூவரும் யாவரும் போற்றும் முகிழ்
நகையே. (92)

### கற்பனை கடந்த கருணை உருவைப் போற்றுதல்

நகையே இஃது; இந்த ஞாலம் எல்லாம் பெற்ற நாயகிக்கு,
முகையே முகிழ்முலை; மானே முதுகண்; முடிவுஇல்; அந்த
வகையே பிறவியும்; வம்பே, மலைமகள் என்பதும், நாம்;
மிகையே, இவள்தன் தகைமையை நாடி விரும்புவதே (93)

### அம்மையின் அடியவர் தன்மையினைக் கூறல்

விரும்பித் தொழும் அடியார் விழிநீர் மல்கி, மெய் புளகம்
அரும்பித் ததும்பிய ஆனந்தம் ஆகி, அறிவு இழந்து,
கரும்பின் களித்து, மொழி தடுமாறி, முன் சொன்ன எல்லாம்
தரும் பித்தர் ஆவர் என்றால் அபிராமி சமயம் நன்றே. (94)

### அம்மையின் குறைந்து வேண்டுதல்

நன்றே வருகினும், தீதே விளைகினும், நான் அறிவது
ஒன்றேயும் இல்லை; உனக்கே பாரம்; எனக்கு உள்ள
எல்லாம்
அன்றே உனது என்று அளித்து விட்டேன்; அழியாத குணக்
குன்றே, அருட்கடலே, இமவான் பெற்ற கோமளமே! (95)

### அம்மையை வழிபடுவோர் அடையும் பயன் இன்னது எனல்

கோமள வல்லியை அல்லியம் தாமரைக் கோயில்வைகும்
யாமளவல்லியை, ஏதம் இலாளை, எழுதரிய
சாமள மேனிச் சகலகலா மயில்தன்னை, தம்மால்
ஆமளவும் தொழுவார், எழுபாருக்கும் ஆதிபரே. (96)

### அம்மையை வழிபடுவோரைக் குறிப்பிடுதல்

ஆதித்தன் அம்புலி, அங்கி, குபேரன், அமரர் தம்கோன்,
போதிற் பிரமன், புராரி, முராரி, பொதியமுனி,
காதிப் பொருபடைக் கந்தன், கணபதி, காமன் முதல்
சாதித்த புண்ணியர் எண்ணிலர் போற்றுவர், தையலையே.(97)

### அம்மை பொய்யர் நெஞ்சில் புகாள் என்றல்

தைவந்து நின் அடித் தாமரை சூடிய சங்கரற்கு,
கை வந்த தீயும், தலைவந்த ஆறும், கலந்தது எங்கே?
மெய்வந்த நெஞ்சின் அல்லால், ஒருகாலும் விரகர் தங்கள்
பொய்வந்த நெஞ்சில், புகல் அறியாமடப் பூங்குயிலே! (98)

### அம்மையின் தன்மையினைப் புகலுதல்

குயிலாய் இருக்கும் கடம்பாடவியிடை; கோலவியன்
மயிலாய் இருக்கும் இமயாசலத்திடை; வந்துஉதித்த
வெயிலாய் இருக்கும் விசும்பல், கமலத்தின்மீது அன்னம் ஆம்;
கயிலாயருக்கு அன்று இமவான் அளித்த கனங்
குழையே. (99)

### அம்மை எப்போதும் அன்பர் நெஞ்சில் நிலவுதல்

குழையத் தழுவிய கொன்றையந் தார் கமழ் கொங்கைவல்லி
கழையைப் பொரு திருநெடுந்தோளும், கருப்பு வில்லும்
விழையைப் பொரு திறல் வேரியம் பாணமும், வெண்நகையும்,
உழையைப் பொரு கண்ணும், நெஞ்சில் எப்போதும்
உதிக்கின்றவே, (100)

### நூல் பயன்

ஆத்தாளை எங்கள் அபிராம வல்லியை அண்டம் எல்லாம்
பூத்தாளை மாதுளம் பூ நிறத்தாளை புவி அடங்கக்
காத்தாளை அம்பிகையில் பாசாங்குசமும் கருப்பு வில்லும்
சேர்த்தாளை முக்கண்ணியைத் தொழுவார்க்கொரு
தீங்கில்லையே. (101)